

# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

சோபகிருது-மார்கழி

2024 - ஜனவரி

இணைய வழி

மலர்-1 - இதழ்-5

அருள்மிகு ஐஸ்வர்யலெட்சுமி தாயார், கொழும்பு

**திருநெல்லை**

இணைய வழி ஆன்மீகத் திங்களிதழ்

சோபகிருது – மார்கழி

2024–ஜனவரி

இணையவழி மலர் 1 – இதழ் 5

(தனிச் சுற்றுக்கு மட்டும்)

சிறப்பாசிரியர்

பொற்கிழிக் கவிஞர்

சொ.சொ.மீ. சுந்தரம்

ஆலோசகர்

தமிழாகரர் தெ. முருகசாமி

ஆசிரியர் குழு

வெளியிடுபவர்

சீர் வளர் சீர்

நாராயண ஞான தேசிக சுவாமிகள்

கோவிலூர் மடாலயம்

கோவிலூர் 630 307

மானகிரி (அஞ்சல்)

(வழி) காரைக்குடி

சிவகங்கை மாவட்டம்

 04565–236846

 94433 37011

இணைய அச்சாக்கம்

திரு. கணேஷ்

ஸ்ரீபெரும்புதூர்

# பொருளடக்கம்

# ஆசியுரை



சீர் வளர் சீர்

**நாராயண ஞான தேசிக சுவாமிகள்**

கோவிலூர் ஆதினகர்த்தர்

## அனைவருக்கும் நமது இனிய பொங்கல் நல்வாழ்த்துக்கள்

தற்போதெல்லாம் பயணங்கள் அதிகமாகி விட்டன. பயணங்கள் பல அனுபவங்களைத் தருகின்றன. குறிப்பாகப் பல தரப்பட்ட மனிதர்களை, அவர்களின் தேவைகளை, சாதனைகளை அறிந்து கொள்ளப் பயணங்கள் பெரிதும் உதவுகின்றன. குறிப்பாகப் பல மைல்கள், பல நாடுகள் கடந்து பயணப்பட்டு ஆன்மீகக் கலந்துரையாடலை நிகழ்த்தும்போது எங்கும் இறைவன் எதிலும் இறைவன் நிறைந்திருக்கிறான் என்பதை உணர்ந்து கொள்ளமுடிகின்றது. சென்ற மாதத்தில் இந்தியாவைச் சுற்றியுள்ள பல வெளிநாடுகளுக்குச் செல்லும் வாய்ப்பினை இறையருள் கூட்டி வைத்தது. இறையன்பர்களைச் சந்தித்து இந்தியாவின் ஆன்மீகத் தொடர்பினை மேலும் வளப்படுத்திக்கொள்ள இப்பயணங்கள் வழி வகுத்தன. அப்பயணங்களின் அனுபவங்களாக நமது ஆசிகள் அனைவருக்கும் உரியதாகட்டும்.

### 1. இலங்கை

சென்ற மாதம் ஓசூரில், நம் முன் வினைப் பயனாகக், கம்பவாரிதி அவர்களைச் சந்தித்து அவர்களுடன் ஒரு நிகழ்வில் கலந்து கொள்ளும் வாய்ப்புக் கிட்டியது. அப்போது, அவர்கள் இலங்கையில் செய்து கொண்டிருக்கும் அறப்பணிகள் குறித்து சுருக்கமாகச் சொன்னார்கள். அவை அனைத்தும் நம்மைப் பெரும் வியப்பில் ஆழ்த்தின.

அவர்கள் கொழும்பில் வசிக்கிறார்கள். யாழ்ப்பாணத்தில் கம்பன் கோட்டம் அமைத்து, கம்பன் விழா நடத்துகிறார்கள். அவர்கள் கிளிநொச்சியில் செய்யும் மிகப்பெரிய அறப்பணிகளை நேரில் காண நம் விருப்பத்தைத் தெரிவித்தோம். அவர்கள் அடுத்து யாழ்ப்பாணம் செல்லும் போது நம்மை அழைத்தார்கள்.

அதன்படி நாம் கொழும்பு சென்று அங்கிருந்து அவர்களுடன் நேரடியாக

யாழ்ப்பாணம் சென்றோம். சுமார் 9 மணி நேரப் பயணம் அவ்வப்போது ஓய்வு எடுத்த நேரம் போக எஞ்சிய நேரமெல்லாம் அவர்கள் செய்யும் சேவை குறித்தும் நாம் மடத்தில் செய்யும் சேவை குறித்தும் விரிவாகப் பேசினோம்.



கம்பவாரிதி அவர்கள் மனதில் உள்ள அடிப்படைக் கவலை என்னவென்றால் இலங்கைத் தமிழர்கள் ஆளுமை குறைந்து கொண்டிருக்கிறது என்பது தான். அவர்களை மீண்டும் ஆளுமை உள்ளவர்களாக மாற்ற வேண்டும் என்ற நோக்கில் கிளிநொச்சியில் ஓர் ஏக்கர் நிலத்தைக் குத்தகைக்கு எடுத்து அதில் திருவள்ளுவர் அறநெறிப் பள்ளி, மற்றும் ஆளுமை வளர்ச்சி நிறுவனத்தினை அவர் நிறுவி உள்ளார்.

அப்பள்ளியில் பிரதி சனி மற்றும் ஞா யிற்றுக் கிழமைகளில் சுமார் 150 பள்ளிக் குழந்தைகளுக்கு வழிபாடு மற்றும் அறநெறி சார்ந்த நூல்கள் பயிற்றுவிக்கப் படுகின்றன.அந்தக் குழந்தைகளுக்கு மதிய உணவு பள்ளியில் விலை இல்லாமல் அளிக்கப் படுகிறது.அந்தக் குழந்தைகளின் பணிவும், பண்பும், அறிவும் ஆற்றலும் நம்மை வியப்பில் ஆழ்த்தின. இதற்குத் தேவையான பொருட்செல்வத்தை வாரிதி ஐயாவும் அவர்களின் வழி நடக்கும் இலங்கை கம்பன் கழக அன்பர்களும் அளிக்கிறார்கள். இது போன்ற செயல்களைக் காணும்போது அவர்கள் எந்த அளவுக்கு திருக்குறளாக வாழ்கிறார்கள் என்பது புரிகிறது. நாமும் நம்மால் இயன்ற அளவுக்கு அவர்களுக்கு உறுதுணையாக இருக்க விரும்புகிறோம்.

அவர்கள் கொழும்பில் கட்டியுள்ள ஸ்ரீ ஐஸ்வர்யலட்சுமி கோவிலில் வழிபாடு செய்தது ஒரு அருமையான அனுபவம். அங்கு இரண்டு நாட்கள் அதிகாலையில் நடைபெறும் திருப்பள்ளியெழுச்சியில் அவர்களுடன் திருவெம்பாவை வழிபாட்டில் கலந்து கொண்டது மிகவும் மகிழ்ச்சியைத் தந்தது.

நமக்கு இந்தப் பயணத்தில் வலுவூட்டப்பட்ட எண்ணம், “அறம் செய்ய விரும்பு , அதற்கு பொருள் மற்றும் அருள் நிச்சயம் கிடைக்கும்“, என்பது தான்.

## 2. ஈப்போவில் நடைபெற்ற அருணகிரிநாதர் விழா

கோவை சிரவை ஆதீனம் நம்மிடம் மிகவும் அன்பும் நட்பும் பாராட்டும் ஆதீனம். அவர்கள் பல ஆண்டுகளாக Dr ஜெயபாலன் அவர்கள் தலைமையில் நடைபெறும் அருணகிரிநாதர் விழாவில் கலந்து கொண்டிருக்கிறார்கள்.

அவர்களுடன் “கரும்பு தின்ன கூலியா’’ என்று மிகுந்த ஆர்வத்துடன் கலந்து கொண்டோம். சிரவை ஆதீனம் அவர்கள் 30 ஆண்டுகளாக ஆதீனகர்த்தராக



காரணங்களுக்காகவும் பாராட்டப்பட வேண்டிய ஓர் அருமையான விழா இவ்விழா.

இதில் முக்கியமான படிப்பினையை நாம் அறிந்து கொள்ள வேண்டும். இந்த விழாவை நடத்தியவர்களின் ஒற்றுமை, மற்றும் ஈடுபாடு உலக மக்கள் அனைவரிடத்திலும் வேண்டும். அவரவர் இல்லத் திருமணம் போல அனைவரும் விழாவில் கலந்து கொண்டு அவரவர் கடமையை பிறர் தூண்டுதலின்றிச் செய்த விதம் பிரமிக்க வைத்தது. இவ்வளவு விரிவான நிகழ்ச்சி ஏற்பாட்டை இவ்வளவு சிக்கனமாக நடத்த இயலுமா என்ற மலைப்பு நம்முள் எழுந்து கொண்டே இருக்கிறது.

இருக்கிறார்கள்.ஒரு மிகச் சிறந்த கோவிலைக் கட்டி நிர்வகிக்கிறார்கள். அன்பர்கள் இறைவனிடம் மக்களே நேரடியாக இறைவழிபாடு செய்வதால் உள்ள நன்மையை உணர்ந்து வேல் பூசையை கோடி அருச்சனையாக அறிமுகம் செய்து நடத்தி வருகிறார்கள். மக்கள் வழிபாட்டுக்கு இவரே முன்னோடியாக விளங்குகிறார்.

மிகச்சிறந்த ஒரு நிகழ்வில் கலந்து கொண்ட மன நிறைவு இந்த நிகழ்வில் கலந்து கொண்டபோது நமக்கு ஏற்பட்டது. 15 ஆண்டுகளாக மருத்துவர் ஜெயபாலன் அவர்கள் தலைமையில் ஏற்பாடு செய்யப்பட்டு வரும் இந்த விழாவில் அமைப்பாளர்கள் சிறந்த குழுவாகச் செயல்பட்டனர். யார் அவர்களுக்குத் தலைவர் என்று தெரியாத அளவில் திரு ஜெயபாலன் அவர்கள் தன்னை முன்னிறுத்தாது பின்புலத்தில் இருந்து நடத்தியது மிகச் சிறப்பு.

தொய்வு இல்லாத நிகழ்ச்சி நிரல், கலந்து கொண்டவர்களுக்கு அளிக்கப்பட்ட வரவேற்பு, கலந்து கொண்டவர்களின் உயிரோட்டமான பங்களிப்பு,என பல

இந்த ஒற்றுமை நம் எல்லா கோவில்களிலும், மற்றும் நாம் நடத்தும் நிகழ்ச்சிகளிலும் பின்பற்றப்படவில்லையே என்ற ஆதங்கம் நம் மனதில் எழுகிறது. இவ்வாறு இந்தியாவில் உள்ள கோவில்களிலும், மலேசியாவில் உள்ள கோவில்களிலும் நடைபெற்றால் எவ்வளவு சிறப்பாக இருக்கும் என்பது நம் கற்பனையில் காட்சியாக விரிந்தது. எல்லா கோவில்களிலும் எல்லோரையும் இணைத்து செயல்பட்டால் நம் முன்னோர் கட்டி நிர்வகித்த கோவில்கள் இன்னும் சிறப்பாகச் செயல்படும். இதனை முன்வைத்து அவ்வாறு ஒற்றுமையாக செயல்பட நம் திருமடம் சிந்தனை கொண்டுள்ளது. அவ்வாறு ஒற்றுமையாகச் செயல்பட நம் திருமடம் இயன்ற வரை உதவத் தயாராக உள்ளது.

**கோவிலூரின் கதை**

# கோவிலூர் ஆண்டவர் திவ்ய வரலாறு

பகுதி-5

## முக்தி நிலை வள்ளல் புதுமையில் புதுமை

- கனகு
காரைக்குடி



சீர் வளர் சீர் முத்தி ராமலிங்க ஞான தேசிக சுவாமிகள்

காரைக்குடி அண்ணாமலை ஐயா என்பவர் தனக்குப் புத்திரப்பேறு இல்லாத நிலையில் சுவீகாரம் எடுக்கப் போகிறேன், ஆண்டவரின் திருவுளம் என்ன என்று கேட்டு நின்றார். ஆண்டவர், ‘‘யாமே உமக்குப்பிள்ளை.சுவீகாரப்படுத்திக்கொள். புதுமை செய்து மகிழ். உடல் ,பொருள், ஆவி அத்தனையையும் எனக்களி’’ என்று அருளினார். ஆண்டவரே தம் குழந்தை என்று மகிழ்ந்து, அண்ணாமலை ஐயா ஆண்டவருக்குப் புதுமை செய்து தம்பொருள்கள் அனைத்தும் காலடியில் இட்டு நின்றார். இப்பொருள் கொண்டு கொற்றாவளீசுவரர் திருக்கோயில் திருப்பணியை வளர்த்தார் ஆண்டவர்.

### ஏழுநாளும் எழு நாளும்

ஆண்டவருக்குத் தன் குரு நினைவு வந்த நிலையில், வீரபத்திரசாமி இருந்து கவனித்து வரும் பொருள் வைத்த சேரிக்கு, பல்லக்கில் பயணப் பட்டார். அந்நேரம் கொற்றவாளீசுவரர் திருக்கோயில் சுற்றுச்சுவர் பலமாகக் கட்டுவதற்காக முன்பிருந்த சுவர் உடைக்கப்பட்டுக் கிடந்த நேரம். ஆண்டவர் அறந்தாங்கி அருகில்

சென்று ஒரு குளத்தில் நீர்வேட்கையைத் தீர்த்துக் கொண்டார். அந்நேரம் கோவிலூர் வந்த நல்லான் செட்டியார் என்ற ஆண்டவரின் பால்யகாலம் முதல் நண்பராக இருந்தவர் ஆண்டவர் எங்கே எனக் கேட்டார். அப்போது அருகிருந்தோர் ஆண்டவர் குருதரிசனத்திற்குப் போய் இருக்கிறார் என்றார்கள். இப்படிச் சுவரை இடித்துவிட்டு, நாய்கள் நடமாட விட்டுவிட்டு வெளியூர் போகலாமா என்று நல்லான் செட்டியார் கவலை கொண்டு திருநெல்லை அம்மனிடம் இதுதகுமா என வேண்டினார்.

அறந்தாங்கிக்கு அருகில் இருந்த குளத்தில் அமர்ந்திருந்த ஆண்டவர் அப்போது ஒரு பறவை துப்பாக்கியால் சுடப்பட்டுக் கீழே விழுவதைக் கண்டு வெருண்டு தன் கால் அறிந்த பாதையில் விரைவில் நடக்கத் தொடங்கினார். இவருக்குத் துணையாக வந்த அப்பாபோலீசும், சூரசம்கார வாத்தியாரும் மற்றவர்களும் ஆண்டவரைப் பின்தொடர்ந்து சென்று அவரைப் பல்லக்கில் ஏற்றி வைத்தனர்.

பொருள் வைத்த சேரிக்கு வந்தபின்பும் ஆண்டவரின் நிலையில் முன்னேற்றம் இல்லாது மயக்க நிலையில் இருந்தார். இதனைக் கண்ட வீரபத்திரசாமி, கோவிலூர் விட்டுக் கிளம்பிய நேரம் சரி யில்லை. மீண்டும் கோவிலூர் சென்றால் நினைவு திரும்பும் என்று சொல்ல, அறந்தாங்கியில் பறவை சுட்ட இடம் வந்து சேர்ந்தது பல்லக்கு. அப்போது ஆண்டவர் உடலில் அசைவு ஏற்பட்டு, சுயநினைவு பெற்றார். இப்படி எத்தனை நாள்தான் இருந்தேன் என்று ஆண்டவர் வினவினார். ஏழுநாட்கள் அவ்வாறு இருந்ததாகத் தெரிவிக்கப்பட்டது. மேலும் ஆண்டவர் “நல்லான் திருநெல்லையிடம் வருந்தி ஏதோ செய்திருக்கிறான்” என்று சொல்ல அதுவே மெய்யென ஆகியது. பின்பு அருள்மிகு திருநெல்லை அம்மனின் திருக்கோயில் மதில்சுவர் பூர்த்தி செய்யப்பட்டது.

## தேர் நிற்றலும் தடை நீங்கலும்

ஆண்டவர் அருள்மிகு கொற்றவாளீசுவரர் ஆலயத்தைத் திறம்பட நிர்வகித்து வந்தார். அக்கோயிலின் தேரோட்டம் நடத்தபோது தேர் ஓரிடத்தில் தடைபட்டு நின்றது. ஆண்டவரிடம் செய்தி தெரிவிக்கப்பட்டது. ஆண்டவர் அதற்கு, ‘‘தெற்குப்பகுதியில் இருக்கும் சிதம்பர விநாயகர் கோயிலில் உள்ள பெரியய்யா, அண்ணாமலை ஐயா ஆகியோரும், வடக்கே ஐயுளி அம்மன் ஆலயத்தில் இருக்கும் கருணாநிதி, குட்டையா ஆகியோரும் ஒன்றிணைந்து வந்தால் தேர் நகரும் என்றார். இதனைக் கேட்ட அனைவரும் ஒரு நொடிக்குள் வந்து சேரத் தேர் நகர்ந்தது.

## நாற்பொருள்களே நற்பொருள்கள்

ஆண்டவர் உலகநன்மைக்காகவே வாழ்ந்தவர். தனக்கென வாழாதவர். தனக்கென எதனையும் கொள்ளாதவர். ஆண்டவர் தன் வாழ்வில் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கையும் அடைந்தவர். யாம் பொருள் கொடுக்கும் போது இவ்வளவு கொடுத்தோம் என்றும் இவ்வளவு கொடுக்கப் போகிறோம் என்று எண்ணித் தந்ததில்லை. அதுவே அறம். குடும்பத்தலைவன் குடும்ப நலனுக்குப் பொருள் தேடுவான். யான் உலகநலனுக்குப் பொருள் தேடினேன். யாம் பெற்ற இன்பம் என்பது எம் வாழ்க்கையை உணர்ந்த உங்களுக்குத் தெரியும். வீடுபேறு என்பது வியாசவசிட்டஜநகாதிகள் அடைந்த ஞானத்தை யானும் பெற்று வாழ்கிறேன். எனவே நாற்பொருளும் நிறைபொருளாய் எம்முள் உள்ளது என்றார் ஆண்டவர். எல்லோரும் இந்நாற்பொருளை நயந்து பெறுவீர் என்றும் ஆண்டவர் அருளினார்.

## வாசிட்டம் உபதேசித்தல்

நிறைநிலைக்கு உதவுவது ஞானவாசிட்டம். நிறைநிலையை நோக்கிப் பயணித்த காரணத்தினாலோ என்னவோ ஆண்டவரும் வாசிட்டத்தைப் பலருக்கும் உபதேசித்து அருளினார். ஏழுமுறை ஞானவாசிட்டம் ஆண்டவரால் உரைக்கப்பெற்றது. குன்றக்குடி முப்பதைந்தாம் பட்டமும், திருவிடைமருதூர் உலகநாத சுவாமிகளும் ஆண்டவரின் இருபுறத்தும் பிரியாது இருந்து அவரின் சொற்கள் கேட்டு மகிழ்ந்தனர்.

## ஆண்டவர் இயற்றிய நூல்கள்

ஆண்டவர் செய்யுள் இயற்றுவதிலும் வல்லவர். அவர் பாடிய நூல்கள் பல. தெய்வநிச்சயம், முத்திநிச்சயம், நெஞ் சோடிரங்கல், கிளிப்பத்து, குரு பற்றிய துதிகள் போன்றன அவற்றில் சில.

இவ்வாறு சொல்லாலும் செயலாலும், நாற்பொருள் பயத்தலாலும் உலக உயிர்களுக்குத் தக்க வழிகாட்டியாக முத்துராமலிங்க ஆண்டவர் விளங்கிச் சிறந்தார்.

## நிறையும் நிறைவும்

பக்திநிறை வள்ளல், முக்திநிறை வள்ளல், சக்திநிறை வள்ளல், ஞானநிலை வள்ளல் முத்துராமலிங்கர் தன் நிறைநாளை ஒரு மாலைக்காலத்தில் உணர்ந்தார். அனைத்து தேசிக பரம்பரையார் அனைவரையும் அழைத்தார். ‘‘இம்மடாலயத்தில் எப்பொழுதும் பரம்பரையாக அடியார் குழாங்கள் இருந்து பரிபாலனம் செய்து வரவேண்டும். இப்பரம்பரையை யார் தொடர்வது’’ என்று சொல்லி ஆண்டவரின் கண்கள் கூடியிருந்த அனைவரையும் பார்த்தன. அவரின் அருள்நோக்கம் துறவு சுவாமிகள் மீது படிந்தது. ‘‘இன்றுமுதல் இம்மடாலயத்திலிருந்து அடியார்களுக்குப் பாடம் சொல்லிக்கொண்டு பரிகலப்பிச்சை ஏற்று உண்ண வேண்டும்’’ என்று ஆண்டவர் அருளி, திருநீறு அளித்து ‘‘என்பால் தந்த சிவஞானத்தை உன்பால் திருநெல்லை அருள்வாள் ’’ என்றும் கூறினார்.

சீர்வளர்சீர் முத்துராமலிங்க ஞான தேசிகர் முக்திநிலை பெற்று இதுவே நிறை சென்மம் என்பதைக் கண்டு ஆயிரத்து எழுநூற்று பத்தொன்பதாம் ஆண்டு, பிங்கலவருடம், உத்தராயணம், பங்குனிமாதம், சுக்கிலபட்சம், எட்டாம்நாள், பௌர்ணிமைதிதி, உத்திரநட்சத்திரம், கன்னியாலக்னம் உடைய நாளில் திருவருளில் நிறைந்தார். அவரின் குருமூர்த்தம் கோவிலூர் வேதாந்த மடாலயத்தின் உள்புறத்தில் என்றும் அருள்நிறை தரும் நிலையில் வைக்கப்பெற்று மண்டலாபிஷேகம் நடத்தப்பெற்றது.

இந்த அதிட்டானத் திருக்கோயிலின் குடமுழுக்கு வரும் பிப்ரவரி 2ந் தேதி நடைபெற உள்ளது.

***(முற்றும்)***

---

**இந்த இதழ் முழுமையாக மின்னணு இதழாக இருக்கும்.இந்த இதழ் வேண்டுபவர்கள் 9443337011 என்ற தொலைபேசி எண்ணிற்கு புலனத் தொடர்பினைச் (WhatsApp) செய்தால் அவர்கள் இந்த குழுவில் இணைக்கப்படுவார்கள்.**

---

# பத்திமை கால ஆடற்கலை

இரா. கலைக்கோவன்,
இயக்குநர்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார்
வரலாற்றாய்வு மையம்,
திருச்சிராப்பள்ளி

## ஆடும் காலம்

அரங்கமாம் சுடுகாட்டில் இறைவன் ஆடும் பெருநடம் பகல், மாலை, இரவு என முப்போதும் அமைகிறது. இறைவனின் பெரும்பகல் ஆடலை ஒரு பதிகம் மட்டுமே காட்சிப்படுத்துவதால், அதை அரிதான பொழுதாகக் கொள்ளலாம். ஆரிருள் மாலையாகவும் பொழுதுகள் சந்திக்கும் அந்தியாகவும் சுட்டப்படும் மாலை ஆடலும் மிகச் சில பதிகங்களிலேயே காட்டப்படுகிறது. இதுவே ஆகமங்கள் கொண்டாடும் சந்தியா தாண்டவமாகப் பதிவானது. இறைவன் விரும்பியாடும் பொழுதாகக் காட்டப்படும் இரவு, இருள் எல்லிகங்குல் எனப் பல சொற்களால் குறிக்கப்பெறுகிறது. சம்பந்தர் ஓரிடத்தே, ‘கழுது துஞ்சும் கங்குல் ஆடும்’ எனக் குறிப்பதன் வழிப் பேய்களும் உறங்கும் இரவில்கூட இறைவன் ஆடி மகிழ்வதாகச் சொல்வதுடன், அச்சிறுபாக்கத்தைப் பாடும்போது இரவும் பகலும் தொடர்ந்தாடிய இறைவனைக் காட்டுகிறார்.

இறைவன் தன் ஒப்பற்ற ஆடலை நிகழ்த்துவதற்கு இரவைத் தேர்ந்தது ஏன்? இருள்மயமான வாழ்க்கையில் ஞானஒளியைத் தேடுவதே குறிக்கோள் என்பதை உணர்த்துவதற்காகவா? அனைத்தும் உறங்கினாலும் அவர் இயங்குவதைப் புலப்படுத்துவதற்காகவா? அல்லது தீக்குள் ஆட, தீயாய் ஆட, தீயேந்தி ஆட, இரவே சரியான பொழுது என்பதாலா?

## தோற்றம், ஒப்பனை, கருவிகள்

ஆடலின் வெற்றியில் பெரும்பங்கு வகிப்பது தோற்றம். அதைக் கருத்தில் கொண்டே அப்பரும் சம்பந்தரும் ஆடும் இறைவனின் தோற்றப்பொலிவு காட்டுவதில் மிகுந்த அக்கறையுடன் சொற்களைப் பெய்துள்ளனர். முகத்திற்கு இணையில்லா அழகு தரும் இறைவனின் சடைகளைக் குளிர் புன்சடை, கோலச்சடை, பொன் போல் புரிசடை என வர்ணிக்கும் இப்பெருமக்கள், அச்சடைமண்டலத்தில் சேர்க்கப்படும் மலர்களாகக் கொன்றை, வன்னி, ஊமத்தம், கரந்தை, எருக்கு, தும்பை, செண்பகம், மல்லிகை, கூவிளம் ஆகியவற்றையும் அவற்றோடு சேர்வனவாய் இளநாகம், வளரும் திங்கள், கொக்கின் தூவல், சுழிப்பட்ட கங்கை, பல்லாடு தலை ஆகியவற்றையும் காட்டுகின்றனர்.

இவை தவிர, ஆடலின்போது இண்டை

புனைந்து மூரல் வெண்சிரமாலையும் கொள்வாராம் இறைவன். இவை அனைத்தும் சேர்ந்த சடைகளை மகுடமாய்ச் சுற்றிக் கட்டிமுடித்த நிலையிலும் இறைவன் ஆடுவதுண்டு. விரித்த சடைகள் திசைகள் பாய, அச்சடைகளில் ஆர்த்துவந்து அமர்ந்திருக்கும் அலை புனலாள் கங்கையின் நீர்த்திவலைகள் தெறித்தெங்கும் தெளிக்க வீறுகொண்டும் இறைவன் ஆடுவதுண்டு. இவ்விரண்டு நிலைகளிலும் இறைவனின் ஆடற்படிமங்களைத் தமிழ்நாட்டுக் கோ யில்களில் காணமுடிவது சிறப்பாகும்.

தலையில் சூளாமணி; நெற்றியில் பட்டம்; வெள்ளைத் தோடொரு காதில்; மற்றொரு செவியிலோ குழை; சில நேரம் இவற்றுக்கு மாற்றாய்ப் புதுவிரி பொன்செய் ஓலையும் புரளும் சுரிசங்கமும் சதுர்வெண் பளிங்குக் குழையும் பொறிஅரவமும் கூடச் செவிகளை அலங்கரிப்பதுண்டு. கழுத்திலோ, இறைவனின் பேராண்மை காட்டும் பன்றிக்கொம்பு, ஆமை, எரி அரவம் தங்கும். அவற்றோடு முத்து, அக்கு (கண்டிகை), பளிக்கு இவற்றாலான வடங்களும் பட்டவர் அங்கமும் மாண்டார் எலும்புகளும் உடன் சேர்வதுண்டு. தோள்களில் ஒத்தவடத்து இளநாக உருத்திரப்பட்டங்களோ, வலம் சூழ்ந்த வள்ளி மண்டலமாய்க் கங்கணங்களோ அமைய, மார்பில் முப்புரிநூல், கொன்றை மாலைகள், மணம் மிக்க பிற மலர்மாலைகள்; கைகளில் உருத்திராக்க வளைகள்; அரையில் புலித்தோலாடை; அதை இறுக்கிப் பிணைக்கும் அணியாகப் பாம்பு; அது, சில போதுகளில் ஐந்தலை, முத்தலைப் பாம்பாகவும் அமையும். பாம்புக்கு மாற்றாகக் கடிசூத்திரமும் அதை இறுக்கக் கபாலவடமும் கொள்வதுண்டு.

இறைவன் புலித்தோல் ஆடையர் எனினும், மான்தோலும் யானைத்தோலும் பட்டும்கூட



குழல், தாளம், முழவு இசையுடன் சிவபெருமானின் குஞ்சிதகரணம், கீழ்ப்புறத்தே பூதங்களின் ஆடல். காஞ்சிபுரம் கயிலாசநாதர்கோயில்.

அவருக்கு உடைகளாகியுள்ளன. சில போதுகளில் நால்விரல், ஐவிரல் அகலக் கோவண ஆடையிலும் அவர் ஆடுவதுண்டு. ‘சொக்கமது ஆடியும் பாடியும் பாரிடம் சூழ்தரும் நக்கர்’ எனும் அப்பரின் குறிப்பு இறைவன் நிர்வாணியாகவும் ஆடிவந்ததைக் குறிக்கிறது. இத்தகு கோலத்தில் பிச்சையேற்கும் அண்ணலாய் இறைவன் ஆடிவருவதைப் படம்பிடிக்கும் அப்பர், சுந்தரர் துணைக்கவரி வீச, குடமுழவு நந்தீசன் வாசகனாக இறைவன் பேசிக்கொண்டும் பாடிக்கொண்டும் வட்டணைகள்பட வருவதாகக் காட்டுகிறார். இடமிருந்து வலமாகவும் வலமிருந்து இடமாகவும் சுழன்று வட்டமிட்டாற் போல் ஆடிவருவதே வட்டணை என்று பேரகராதி கூறும். இந்த வட்டணையை நான்காய்ப் பகுக்கும் பஞ்சமரபு, அவற்றிற்கான

விளக்கங்களைத் தரவில்லை. என்றாலும், சீனிவாசநல்லூர் குரங்கநாதர்கோயில், புள்ளமங்கை ஆலந்துறையார் கோயில், உய்யக்கொண்டான் திருமலை விழுமியநாதர் கோயில் உள்ளிட்ட பல திருக்கோயில்களில் இவ்வட்டணை பயிலும் சிவக்கோலங்களைச் சோழச் சிற்பிகள் செதுக்கல்களாய்க் காட்சிப்படுத்தி யுள்ளனர். புலித்தோலாடையில் ஆடவல்லான் படிமத்தைப் பல கோயில்களில் காணமுடிகிறது. மான்தோலாடையில் செம்பியன்மாதேவிக் காலச் சிற்பமாகக் கரந்தை ஆடவல்லான் உடன்கூட்டத்தாருடன் காட்சிதருகிறார்.

செழுங் கிண்கிணித்திரளும் செறிபாடகமும் திருவடிகளை அலங்கரிக்க, கால்களின் சிலம்பும் கழலும் இறைவன் ஆடும்போது எழுப்பும் இனிய ஓசை சம்பந்தரை மயக்குகிறது. 'கழலினோசை சிலம்பின் ஒலியோசை கலிக்க, பைங்கழல் ஆர்க்க ஆடும், கழலினோசை ஆர்க்க ஆடும், பாதம் சிலம்பார்க்க' எனும் பாடலடிகள், ஆடலில் சிலம்பும் கழலும் பெறும் சிறப்புச் சொல்கின்றன. இறைவன் வலக்காலில் அணிந்துள்ள கழல் அத்தியாளியின் உருவம் எழுதப்பெற்ற வீரக்கழலாம். தலை முதல் கால்வரை அணிகளும் ஆடைகளும் காட்டிப் பாடுபவர்கள், மேனியின் எழில்கூட்ட இறைவன் பூசிக்கொண்ட பொடிகளையும் சுட்டுகின்றனர். மாண்டவர் சுடலைப்பொடி, சுடுநீறு, சுண்ணமா உள்ளிட்ட பிறபொடிகள் எனப் பலபடப் பூசி நின்றாடும் இறைவனின் ஆடல்முனைப்பில் எரித்தோர் சுடலையின் நுண்பொடியும் திருமேனியில் சேர்ந்துவிடுகிறது. இவைதவிர, இறைவன் சந்தனச்சாந்தும் கொள்வதுண்டு.

இத்தனையும் இணைய, கோலம் பல அணிந்து, இறைவன் ஆடும்போது



முழவிசைக்கு சிவபெருமானின் சுவஸ்திகக்கரணம். ஆடல் காண்பவராய் உமையன்னை. பூதங்கள் உடன் ஆடல் காஞ்சிபுரம் முக்தீசுவரம்.

கைக்கொள்ளும் பொருட்களாக முத்தலைஈட்டி, மழு, கட்வாங்கம், தண்டு, வலிக்கோல், கொலைவேல், கங்காளம், மணி, அனல், தலை, சுரை, குண்டிகை, புத்தகம் முதலியவற்றைச் சுட்டும் தேவார ஆசிரியர்கள், மான்மறி, பாம்பு முதலிய உயிரினங்களையும் யாழ், வீணை, கொடுகொட்டி, கல்லலகு, பறை, துடி, தக்கை முதலிய இசைக்கருவிகளையும் அவர் கைகள் கொள்ளும் எனக் கூறுவதுடன், அவை ஒவ்வொன்று பற்றியும் விரித்துரைக்கவும் தவறவில்லை. அவற்றுள், பதிக அடிகளில் பெருமைக்குரிய இடத்தைப் பெறுவது அனல்தான். செந்தீ, அனல், கனல், எரி, சுடர், ஆரழல் என்றெல்லாம் பாராட்டப்படும் நெருப்பை இறைவன் உள்ளங்கையில்

ஏந்தி ஆடுகிறார். இத்தீயேந்திய கையைப் பல்லவர், பாண்டியர், சோழர் சிற்பங்களில் காணநேரும்போது, அனல், சிற்பிகளின் கண்ணோட்டத்தில் எத்தகு வடிவங்களை எல்லாம் கொண்டு ஒளிர்ந்துள்ளது என்பதை அறிந்து மகிழலாம்.

இறைவன் ஏந்தும் சூலம் இரும்பார்ந்த சூலம், சுடர்விடும் சூலம், முத்தீ அனையதோர் மூவிலைவேல், சின்மணிய மூவிலை வேல் எனப் போற்றப்பட, மழுவோ, ஒளிவெண்மழு, கொடுமழு, வெய்யமழு என்றெல்லாம் சிறப்பிக்கப்படுகிறது. கூரான இம்மழு தசையின் நாற்றம் நிறைந்தது; தகாதாரை ஒறுப்பது. கருவிகள் காட்டிய இப்பெருமக்கள், கைக்குறிப்புகளாம் முத்திரைகளை யாண்டும் முதன்மைப்படுத்தாமை குறிப்பிடத்தக்கது.

### உடன்கூட்டமும் நோக்கி மகிழ்வாரும்

ஆடும் களத்திற்கேற்ப அமைந்த உடன்கூட்டமாய்ப் பேய்களும் பூதப்படைகளுமே ஆடலராம் இறைவனைச் சூழ நின்று, அவர் ஆடல் போற்றி, அகமகிழ்ந்து, தமை மறந்து இறைவனைப் பரவசத்தோடு கைதொழுது ஏத்துகின்றன. 'பேய்க்கணம் பூதஞ் சூழ முழங்கு செந்தீ ஏந்தியாடி, கழுதொடு பாரிடம் கைதொழு தேத்த' என்பார் சம்பந்தர். பாரிடமென்றும் பூதங்களென்றும் அன்போடு அழைக்கப்படும் இறைவனின் இந்த அடியவர்களைப் பற்றிய சம்பந்தரின் வண்ணனைகள் சிறப்பானவை.

இவை குள்ளச்சிறு பூதங்களாம். பருத்த வடிவினவாம்; வீட்டுக் குடம் போன்ற வயிறு உடையனவாம்; பந்தம் உடைய அவை ஆந்தை விழிகள் கொண்டனவாம். இந்தப் பந்தம் இறைவனோடு அவற்றுக்குள்ள நெருங்கிய பிணைப்பைக் காட்டப் பெய்த சொல்லாகலாம். அல்லது மார்புக்கும் வயிற்றுக்கும் இடையே பூதங்கள் அணியும் உதரபந்தத்தைச் சுட்டவும் இந்தச் சொல்லைச் சம்பந்தர் பயன்படுத்தியிருக்கலாம். தமிழ்நாட்டுக் கோயில்களில் செதுக்கப்பட்டிருக்கும் பூதவலபிகளில் உதரபந்தம் இல்லாத பூதங்களைக் காண்பதரிது. ஓர் எளிய மெல்லிய பட்டையாகவோ, பூப்பதக்கங்களால் அலங்கரிக்கப்பட்டு முடிச்சிடப்பட்ட அகலமான அணிகலன் போலவோ இந்த உதரபந்தம் அமைவதுண்டு. சில பூதங்கள் பாம்பையே கூட உதரபந்தமாய்க் கொண்டுள்ளன. சம்பந்தரின் வண்ணனையை அடியொற்றி வடிக்கப்பட்டிருக்கும் இப்பூதப்படை இறைவனின் பெரும்பாலான ஆடல்தோற்றங்களில் உடன்கூட்டமாய்க் காட்டப்பட்டுள்ளமை பதிகங்களைப் பின்பற்றியே பல்லவ, சோழச் சிற்பங்கள் தோன்றியமையை மெய்ப்பிக்கும்.

பூதங்களைப் போலவே பேய்களும் பதிக ஆசிரியர்களைப் பெரிதும் கவர்ந்துள்ளன. பறை போல் விழிகட் பேய் என்ற சங்க இலக்கிய உவமையை அப்படியே பின்பற்றும் சம்பந்தர், தீயில் வேகும் பிணங்களை நுகர, எரியில் நிற்பதால் அவற்றின் கால்கள் கரிந்து நிற்பதாகக் காட்டுகிறார். இந்த வண்ணனை சம்பந்தர் காலத்தில் பேய்களுக்குக் கால்கள் கிடையாது என்ற நம்பிக்கை வழக்கில் இல்லாமையை உணர்த்துகிறது. நீட்டிய நாக்கும் பரந்த கூந்தலும் உடைய அப்பேய்கள் இறையாடலுக்கு ஒரு முன்னுரை போலப் பெருங்காட்டில் தாம் ஆடி மகிழ்கின்றன. அவற்றின் முதல் ஆடலைத் தொடர்ந்தே இறைவனின் எரியாடல். இதை, 'கரிகாலன குடற்கொள்வன கழுதாடிய காட்டில் . . . . எரியாடிய இறைவன்' என்பார் சம்பந்தர். பேய்களும் பூதங்களும் தாமாக ஆடியும் இறைவனைச் சூழ ஆடியும் களித்ததுடன்,

கற்றுக்கொள்ளும் விழைவுடன் அவரது ஆடலை உற்றுநோக்கின. அவற்றுடன் அலையார் புனல் கங்கைநங்கையும் அமரர் கணம் உட்படப் பதினெண் கணமும் பாரோரும் விண்ணோரும் பார்த்தனர். அப்பரும் பார்த்தார். 'நிருத்தம் நான் காணவேண்டி நிருத்தனார் நிருத்தம் செய்ய' எனும் அவரது பதிவு இதை உறுதி செய்யும்.

இறைவனின் ஆடலை அம்மையும் நோக்கினார். கந்தம் மல்கு குழலி, மானடைந்த நோக்கி, செழுங்கல் சேந்தன் செல்வி என்றெல்லாம் புகழ்ந்து கொண்டாடப்படும் அம்மையின் அருள் நோக்கை, அத்தனின் ஆடலில் தோய்ந்த அவரது மகிழ்ச்சிப் பூரிப்பை அப்பரும் சம்பந்தரும் பதிகங்களில் பலபடப் பதிவு செய்துள்ளனர். கண்டும் களித்தும் இறைவி போற்றும் இந்த திருஆடலைக் காளி முன்நின்று கண்டதாகச் சம்பந்தர் சொல்வார். அறுவர்க்கு இளையநங்கையாக இளங்கோவடிகள் சுட்டும் காளி, இறைவன் ஆடலைக் கண்டதோடு, அவரோடு ஆடற்போட்டியில் ஆடித் தோற்றதையும் சம்பந்தர் பதிவுசெய்திருக்கிறார். தாரகனை அழித்து ஊழித்தீப் போல் கொதித்திருந்த காளியின் சினம் இறைவனுடன் சொக்கமும் நிருத்தமும் ஆடி, அந்த ஆடலின் விளைவால் வெப்பம் தணிந்து குளிர்ந்து குணமானதாகக் குறிக்கும் சம்பந்தர், அதனாலேயே, இறைவனை, 'காளியைக் குணஞ்செய் கூத்துடையோன்' என்பார்.

சொக்கம், நிருத்தம் எனும் இந்த இரண்டு ஆடற்கலைச் சொற்களும் சங்க இலக்கியங்களிலோ, காப்பியங்களிலோ இடம்பெறாதவை. சிலப்பதிகாரம் குறிப்பிடும் இருவகைக் கூத்தை விளக்குமிடத்து அவற்றை சாந்தி, விநோதம் என்பார் அடியார்க்குநல்லார். சாந்தியின் நான்கு உட்பிரிவுகளுள் ஒன்றே சொக்கம். 'சொக்கம் என்றது சுத்த நிருத்தம். அது நூற்றெட்டுக் கரணம் உடைத்து' என்பார் அடியார்க்குநல்லார். இந்தச் சொக்கத்தையே பரதரின் நாட்டியசாத்திரம் தாண்டவலட்சணமாய்க் காட்டுகிறது. இறைவனும் காளியும் ஆடிய ஆடலில் இந்தச் சொக்கம் சிறப்பிடம் பெற்றதையும் இறைவன் பூதங்கள் சூழச் சொக்கமது ஆடியும் பாடியும் திரிதரும் நக்கர் என்பதையும் பாடியிருப்பதன் வழி, 6ஆம் நூற்றாண்டு ஆடற்கலை அமைப்பியலையும் பத்திமை ஆசிரியர்கள் பதிவுசெய்துள்ளனர்.

108 கரணங்களைக் கொண்டதான இச்சொக்கத்தின் சில கூறுகளைப் பல்லவ, சோழர் கற்றளிகள் இறைவன் ஆடுமாறு போலவும் மக்கள் நிகழ்த்துமாறு போலவும் சிற்பங்களாய்க் கொண்டுள்ளன. சீயமங்கலம் அவனிபாஜன பல்லவேசுவரமும் காஞ்சிபுரத்தில் கயிலாசநாதர், இறவாதான்ஈசுவரம், வைகுந்தப் பெருமாள், மாமல்லபுரத்தில் உலக்கணேசுவரர், திருப்பட்டூரில் கயிலாசநாதர் முதலிய கோயில்களும் பல்லவர் காலத்தமைந்த சொக்கச் சிற்பங்களைக் கொள்ள, குன்றக்குடி, திருமலைப்புரம், செவல்பட்டிக் குடைவரைகளும் திருப்புத்தூர்க் கற்றளியும் பாண்டியர் கைவண்ணத்தில் சொக்கம் சேர்த்துள்ளன. சோழர்கள் சொக்கம் வகை ஆடலைப் போற்றிக் கொண்டாடியமை அவர்தம் கற்றளிகளில் இன்றும் காணக்கிடைக்கும் பல அளவுச் சிற்பங்களால் தெளிவாதல் காண்க. இந்தச் சொக்கம் 13ஆம் நூற்றாண்டுவரையிலும் தொடர்ந்திருந்தமை, 'பதியிலார் சொக்கம் ஆடும் பொழுது இடபத்தளியார் பாடக் கடவார்களாகவும்' என்ற இராஜநாராயண சம்புவரையர் கால ஒற்றியூர்க் கல்வெட்டால் புலப்படுகிறது.

பத்திமை ஆசிரியர்கள் சுட்டும்

நிருத்தம் சோழர் காலம் வரை தொடர்ந்திருந்தமைக்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. நிருத்தம் ஆடியதாலேயே நிருத்தனார் என்றும் அழைக்கப்பட்ட இறைவன் காளியுடன் சொக்கம் ஆடி, அதில் காளி இறைவனுக்கு இணையான திறம் காட்ட, அவரைக் குளிர்விக்கும் நோக்குடனே ஆடிய இரண்டாம் வகை ஆடலே நிருத்தம். சிலப்பதிகாரமோ, அடியார்க்குநல்லாரோ நிருத்தம் பற்றிப் பேசவில்லை என்றாலும், சொக்கத்தைச் சுத்தநிருத்தம் எனக் குறிப்பிட்டதன் வழி, சுத்தம் என்ற முன்னொட்டு இல்லாமல் நிருத்தம் என்றொரு கலைச்சொல் வழக்கில் இருந்தமையை அடியார்க்குநல்லார் மறைமுகமாகப் பதிவுசெய்துள்ளார்.

கை, கால் அசைவுகளுக்கு முதன்மை அளித்த சொக்கத்தினின்று மாறுபட்டு, அதன் 108 கரணங்களில் சிலவோ, பலவோ இணைந்த கூட்டில் அவிநயம் இன்றி வெளிப்பட்டதே நிருத்தம் என்றழைக்கப்பட்ட ஆடல்வகையாகலாம். இதை நாட்டிய சாத்திரம் அங்ககாரமாகக் குறிக்கும். நிருத்தமாடிய கலைஞர்கள் சோழர் காலத்தில் நிருத்தப்பேரரையன், நிருத்தமாராயன், நிருத்தவிடங்கன் எனும் சிறப்புப் பட்டங்களைப் பெற்றனர். வீழிமிழலையில் நிகழ்த்தப்பட்ட நிருத்தக்கூத்தை இறைவன் எழுந்தருளிக் கண்டதாகக் கல்வெட்டுப் பேசுகிறது. சித்தலிங்கமடத்தில் நிருத்தமாடிய திருப்புலிபகவர் நிருத்தவிடங்கிக்குக் கால்செய் நிலம் கொடையாகத் தரப்பட்டது. டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மைய ஆய்வர்கள் வெண்காடு, மேலப்பெரும்பள்ளம், பொன்செய் உள்ளிட்ட சோழர் கோயில்களில் கரணவட்டத்தில் வராத நிருத்தச் சிற்பங்களை அடையாளப்படுத்தியுள்ளன.

# திருமந்திரம்

மன்றத்தே நம்பிக்கு மாடம் எடுத்தது;
மன்றத்தே நம்பி சிவிகை பெற்று ஏறினான்;
மன்றத்தே நம்பி முக்கோடி வழங்கினான்;
சென்று, ‘அத்தா’ என்ன, திரித்தலன் தானே.

கருத்து: நம்பியின் சிறப்பால் ஊர்ப்பொதுவிடத்தில் அவனுக்கு அரண்மனை கட்டப்பெற்றது. அவன் பல்லக்கில் ஊர்ந்து பெருவாழ்வு வாழ்ந்தான். கொடை வள்ளலாக விளங்கினான். இப்பொழுது இறந்து பிணமானான். தன் பின்னே பலரும் சென்று ‘எம் தலைவா’ என அழைத்தும் அவன் மீளவில்லை.

*****

தேய்ந்து அற்று ஒழிந்த இளம; கடைமுறை
ஆய்ந்து அற்ற பின்னை அரிய கருமங்கள்;
பாய்ந்து அற்ற கங்கைப் படர்சடை நந்தியை
ஓர்ந்து உற்றுக் கொள்ளும் உணர்வு உள்ள போதே.

கருத்து: இளமை தேய்ந்து மறைவது. கங்கை பாயும் சடையை உடைய சிவபிரானைச் சிந்தித்து; உணர்ந்து; அடையம் உணர்வு நன்றாக உள்ளபொழுதே முதியவயதில் முடிப்பதற்கு அரிய யோக சாதனை முதலிய அரிய செயல்களை மேற்கொண்டு, இறுதிவரை ஆய்ந்து செய்து முடிக்க.

*****

எவ்வாறு காண்பான் அறிவு தனக்கெல்லை
அவ்வாறு அருட்செய்வன் ஆதிஅரன் தானும்
ஒவ்வாத மன்றுள் உமைகாண ஆடிடும்
செவ்வானிற் செய்ய செழுஞ்சுடர் மாணிக்கமே.

கருத்து: பக்தர்கள் ஒவ்வொருவரும், தமது அறிவின் எல்லைக்கேற்ப தனக்குத் தெரிந்த முறையில் சிவபெருமானை அணுகுகிறார்கள். அந்தச் சிவபெருமானும் பக்தர்கள் தன்னை எப்படி அணுகுகிறார்களோ, அந்த வழியிலேயே அவர்களுக்கு அருள் செய்கிறான். அந்த பழமையான சிவன் ஒப்பில்லாத சபையிலே உமையம்மை காண நடனம் செய்பவன். அந்த நடனத்தின் போது, சிவபெருமான் செவ்வானத்தை விடச் சிவந்த ஒளி வீசும் மாணிக்கமாகத் திகழ்கிறான்.

சிவனை அணுகுவதற்கென்று விசேஷமான அறிவெல்லாம் தேவையில்லை. அவரவர் அறிவின் எல்லை அறிந்து, சிவன் அதற்கேற்றபடி தன்னைக் காட்டிக் கொள்வான்.

# நல்லன எல்லாம் தரும் சுந்தர காண்டம்

பகுதி-3



முனைவர் சரசுவதி இராமநாதன்,
பள்ளத்தூர்

## அற்புதக்காட்சி:

ஊரெல்லாம் தேடிப்பார்த்த அனுமன் தூரத்தே தெரிந்த ஒரு சோலையைக் கண்டான். அது தான் அசோகவனம் (அச்சோகவனம்). சோகத்துடன் சீதை தவமிருந்து அமரர்க்கு அசோகம் (மகிழ்ச்சிநிலை) தந்தாளே!

சுந்தர காண்டத்தைப் பக்தியோடு பாராயணம் செய்தால்.

1. பிரிந்தவர் ஒன்று சேர்வர். (பிரிந்திருந்த இராமனும் சீதையும் சேர அனுமன் உதவினான் அல்லவா)

2. கடல் கடந்து செல்வோருக்கு அபாயம் நேராது. (அனுமன் கடல் தாவி, இடையூறுகளை வென்று மீண்டான் அன்றோ!)

3. நெருப்பிலே வேலை செய்தாலும் பயமில்லை. (அனுமன் வாலில் பற்றிய நெருப்பைச் சீதாப்பிராட்டி குளிரச் செய்தாளே!)

4. உயிர் காக்கும் அருமருந்து சுந்தரகாண்டம். (சீதை உயிர்விடப் போன சமயம் இராம நாமத்தால் அனுமன் அவரது உயிரைக் காத்தான் அல்லவா!) (ஒரு முறை தமிழ்த்தாத்தா உ.வே.சா. அவர்களின் ஆசான் கடுமையான விஷக் காய்ச்சலால் படுத்திருந்த போது தன்னருகே அமர்ந்து சுந்தரகாண்டம் படிக்குமாறு உ.வே.சா. விடம் சொல்லி, அதனால் குணமடைந்தது வரலாறு)

5. எதிரிகளால் இடையூறு வராமல் காக்கும் சுந்தரகாண்டம். இப்படிப் பல நன்மைகள் தருவது சுந்தரகாண்டம்.

பல பேருடைய பிரச்சினைகளைச் சுந்தரகாண்டம் பாராயணத்தால் நானே தீர்த்து வைத்த அனுபவத்தைப் பெற்றுள்ளேன். நகரத்தார்கள் பல நூறாண்டுகளாக இராமாயண ஏடு படித்து, வீடுகளில் புரட்டாசி மாதம் பட்டாபிஷேகம் செய்வதுண்டு. நம் கோவிலூர் ஆதீனம் சாமியின் தாயார் இராமாயணம் படித்த போது நான் பங்கு பெற்றேன்.

அசோகவனம், காலையும் மாலையும்



இல்லதோர் கைத்தொழும் கற்பகச் சோலை, பகலிரவு தெரியாத அடர்ந்த சோலை. அதை அனுமன் பார்த்ததுமே வானவர் பூ மழை சொரிந்து வாழ்த்தினர்.

## அங்குச் சீதை இருந்த நிலை:

1.தடி தடியாக இருந்த அரக்கியர்கள் நடுவே கொடியிடைச் சீதை இருந்தாள்.

2. பாறைகளின் நடுவே சஞ்சீவிச் செடி போல் இருந்தாள்.

3.வெயிலிடை வைத்த விளக்கு போல் ஒளி குறைந்து காணப்பட்டாள்.

4.புலிக்கூட்டத்தின் நடுவே அகப்பட்ட மான் போலிருந்தாள்.

5.நீர் ததும்பியிருக்கும் பெண்களின் கண்களை மழைக்கண் எனக் கவிஞர் வர்ணிப்பார். சீதையின் கண்களோ கண்ணீர் மழையைக் கொட்டியவாறிருந்தது காரணக்குறியானது.

6.ஒற்றையாடை கண்ணீரால் நனைந்தும், வெப்பப் பெருமூச்சால் உலர்ந்தும் என மாறி மாறிக் காட்சி தந்தது.

7. சுருதி நாயகன் தன்னை மீட்க வருவான் என அனைத்துத் திசைகளையும் பார்த்துப் பார்த்துச் சோர்ந்திருந்தாள்.

8. பரசுராமனின் வில்லை வாங்கி அவன் தவத்தை முற்றும் வாங்கிய வெற்றியை நினைத்து விம்மினாள்.

9. ஒரு தருப்பைப் புல் எடுத்துக் காகாசுரனை ஓடஓட விரட்டி அவன் ஒரு கண்ணைப் பொடியாக்கிய வீரத்தை எண்ணி ஏங்கினாள்.

'என் இடது தோளும், கண்ணும் துடிக்கிறதே!' எனத் தன்

அருகிலிருந்த திரிசடை (வீடணன்மகள்) யிடம்கூறினாள். அப்போது திரிசடை சீதையிடம் கூறினாள்.

“ஒரு கனவு கண்டேன் ஒரு தும்பி வந்து காதருகே ஊதியது. யாரோ ஒரு தூதன் வந்து உனக்கு நற்செய்தி சொல்வான். இராவணன் செவ்வாடையணிந்து தலையில் எண்ணெய் வழிய தென்திசை நோக்கி கழுதைத் தேரில் போவது போல் கனவு வந்தது. பெரியப்பா தசமுகனுக்கு அழிவு எனத் தோன்றுகிறது. பெரியப்பா மனை யிலிருந்து பொன்மகள் தீபம் ஏந்தி என் தந்தை வீடணன் மனையில் புகுந்தாள். அதற்குள் நீ எழுப்பி விட்டாயே அம்மா” எனக் கூறினாள். அக்கனவைக் கேட்ட சீதை ஆர்வம் மேலிட போய்த் தூங்கி மீதிக் கனவைக் கண்டு சொல்லம்மா! என்றாள். இதையெல்லாம் மரத்தின் மீதிருந்து பார்த்த அனுமன் “வீடினது அன்று அறன்; யானும் வீகலேன்” “தேவனே அவன்; இவன் கமலச் செல்வியே!”

“மாசுண்ட மணி போல் விளங்கும் இக்காசுண்ட கூந்தலாள் (காசு, அழுக்கு, சிக்கு) கற்பும், காதலும் ஏசுண்டதில்லை.

“இராமனின் வீரத்தோள்களைப் புகழ்வேனா!

வனிதையர் திலகமான சீதை மனத்திட்பத்தைப் பாராட்டுவேனா!

சனகன் குலத்தைப் போற்றுவேனா?”

“நெருப்பிடை நின்றும், நீரில் மூழ்கியும், உண்ணாமல், உறங்காமல் தவம் செய்தும், பேறு பெற்றவர் இருக்கட்டும். மங்கையர் மனத்தவத்திற்கு ஈடுண்டோ!

“குடிப்பிறப்பு, பெண்மை, நாணம் இவை சீதைபிறந்ததால் உயர்ந்தன. இவ்வாறு இவள் தவம் செய்வதை இராமன் தன் கமலக் கண்களால் காணக் கொடுத்து வைக்கவில்லையே!” என்றான் அனுமன். இதுவும் உணர்ச்சி அதிகமானதால் வந்த பேதைமையோ இராமன் பக்கத்திலிருந்தால் சீதை மகிழ்ச்சியாக ஆடிப்பாடுவாளா! தவம் செய்வாளா! பிரிந்ததால் தானே தவம் செய்கிறாள். அவன் எப்படி இதைக் கமலக்கண்களால் பார்க்கமுடியும்! இதில் வேறு ஒரு பொருள் இருக்கலாம். கடைசியில் சீதையை அலங்காரத்தோடு தான் இராமனிடம் சேர்ப்பித்தனர். அவளது தவக்கோலத்தை இராமன் பார்க்கவில்லை. அதை முன்கூட்டியே உணர்த்தினானே அனுமன்.

*“மாணநோற் றீண்டிவள் இருந்த வாறெலாம்*
*காணநோற் றிலஅவன் கமலக் கண்களே!*

இவ்வளவு கொடிய அரக்கர் கூட்டத் திலிருந்து சீதையைக் காத்தது எது?

*“தருமமே காத்ததோ சனகன் நல்வினைக்*
*கருமமே காத்ததோ கற்பின் காவலோ*
*அருமையே அருமை ஆரிது ஆற்றுவார்*
*ஒருமையே எம்மனோர்க்கு உரைக்கற் பாலதோ”*

“வெல்லு மோதீவினை, அறத்தை மெய்ம்மையால்” தீமை வெல்லாது. முன்னோர் செய்த நற்செயல்கள் நம்மைக் காக்கும்.

# கோவிலூர் ஆதீன வெளியீடுகள்
# கோவிலூர் புதையல்கள் - 4

# வேதாந்த நூல்களுள் ஒன்றான இலட்சணா விருத்தி

## - நூல் அறிமுகம்



- கு. அன்பு மெய்யப்பன்,
உதவிப் பேராசிரியர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி,
காரைக்குடி - 3.

சீர் வளர் சீர் முத்துராமலிங்க ஆண்டவர் கோவிலூரில் வேதாந்த மடத்தை நிறுவியபோது அவர் மனத்தில் இருந்த முக்கிய நோக்கம் தான் கற்ற வேதக் கல்வியை அனைத்து சமுதாயத்தைச் சார்ந்தவர்களுக்கும் வழங்க வேண்டும் என்பதே ஆகும். வேதாந்தக் கல்விக்கு ஏழ்மையோ, சாதி வேறுபாடுகளோ தடையாக இருக்கக் கூடாது என்பதற்காகத் தன் வாழ்நாள் முழுதும் அர்ப்பணித்தவர் சீர்வளர் சீர் முத்துராமலிங்க ஆண்டவர் சுவாமிகள். அவரின் வழியைப் பின்பற்றிக் கோவிலூர் மடாலயம் இன்றும் வேதாந்தக் கல்வியை அனைத்துத் தரப்பினருக்கும் வழங்கி வருகின்றது.

பதினாறு வேதாந்த நூல்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு, வேதாந்தப் பாடங்கள் நூற்று எழுபது ஆண்டுகளாகக் கோவிலூர் மடாலயத்தால் கற்பிக்கப்பட்டு வருகின்றது. இவ்வேதாந்தப் பாடங்கள் கல்லூரிப் பாடத்திட்டத்திற்கு இணையானவை என்றால் மிகை யில்லை. வேதாந்தம் மிகுதியாகக் கற்பிக்கப்படும் வடமாநிலங்களில் இப்பாடத்திட்டம் "கோவிலூர் மண்டலி" என்றழைக்கப்பட்டு இதற்கென்று தனித்த பெருமை தரப்படுகின்றது.

இப்பதினாறு வேதாந்த பாடங்களுள் ஒன்றுதான், இலட்சணா விருத்தி என்னும் நூலாகும். இதனை, மூன்றாம் பட்டம் சீர் வளர் சீர் கருணாநிதி சுவாமிகள் இயற்றியுள்ளார். சென்ற இதழில் அவர் இயற்றிய குரு ஸ்துதி குசுமாஞ்சலி நூல் அறிமுகம்

செய்யப்பட்டது. இவ்விதழில் இலட்சாண விருத்தி என்ற நூல் குறித்து அறிமுகம் செய்யப்படுகிறது.

## நூல் உருவாகக் காரணம்

ஸ்ரீ ஆதிசங்கரர் வடமொழியில் எழுதிய நூல் "இலட்சணா விருத்தி" ஆகும். இந்நூலுக்கு அது சொல்லும் கருத்தின் அடிப்படையில் "பிரம்ம நாமாவளி" என்ற பெயரும் உண்டு. பிரம்மம் என்பது கடவுளைக் குறிக்கும். நாமாவளி என்பது நாமம் +ஆவளி என்று பிரித்துப் பார்த்தால் கடவுள் பெயர்களின் வரிசை எனப் பொருள்கொள்ளலாம். இந்நூலை அடிப்படையாக வைத்துக் கொண்டு, தமிழில் இந்நூல் உருவாக்கப்பெற்றுள்ளது. உலகின் ஒரே உண்மைப் பொருளான பிரம்மத்தை விளக்குவதற்காகவே இந்நூல் படைக்கப்பட்டுள்ளது.

## நூலின் அமைப்பு

இந்நூல் மொத்தம் நூற்றுப் பதிமூன்று பாடல்களைக் கொண்டது. பாயிரமாக முதல் நான்கு பாடல்கள்அமைந்துள்ளன. அடுத்த எழுபத்தியிரண்டு பாடல்களில் நிதித்தியாசன யுக்தியை விளக்குகின்றன. நிதித்தியாசனம் என்றால், அநாத்மகார விருத்திகளைத் தடுத்து, ஆத்மாகார விருத்திகளின் மீது ஈடுபாடுகொள்வது. அதாவது அநாத்மாவான உடலை வெறுத்து ஆத்மாவை அறியும் செயல்களில் ஈடுபடுவதாகும்.

ஆத்மா என்ற சமக்கிருதச் சொல் ஆன்மா என்றழைக்கப்படுகிறது. ஆன்மா என்றால் நம்முடைய உடலை, உயிரை இயக்குகின்ற எளிதில் புரிந்து கொள்ளமுடியாத சூட்சமக் கருவி என்று சொல்லப்படுகிறது. உயிர் இல்லையேல் உடல் இருக்காது. உடலை வைத்துத்தான் உயிர் இயங்கமுடியும். ஆகவே, உயிர் உடல் இரண்டையும் இணைத்து வைக்கின்ற ஒப்பற்ற கருவியே ஆன்மா எனப்படுகிறது. இந்த இரண்டும், அதாவது உடலும், உயிரும் சேர்ந்து செயல்படுகின்ற ஒரு பொருளைத்தான் சீவன் என்று அழைக்கின்றனர். ஆன்மா பற்றிய செய்திகளை இந்நூல் விரிவாகத் தருகின்றது.

மீதமுள்ள நாற்பத்து மூன்று பாடல்களும், சமாதி யுக்தியை விளக்குகின்றன. சமாதி என்பதற்கு, தியானம் செய்பவனையும், தியானத்தையும் இழந்து தியானிக்கப்படுகின்ற பொருள் மட்டுமே இருப்பது சமாதி எனப் பொருள் கூறப்படுகிறது.

ஆக, ஆன்மாவை அறிந்து, இறைவனை அடையும் முறையை முழுமையாக விளக்குகிறது இலட்சணா விருத்தி.

இந்நூலின் பாயிரத்தில் அமைந்த ஒரு பாடல்,

*பிரம்மத்திற்கு உரிய வாகும் பெயர்கள் நூற் றுஎட்டி னுக்கும்*

*விரிவதாம் பனுவல் நூலின் விளங்கிய பொருள்கள் உள்ளத்து*

*உரமதாத் தரிக்க வேண்டி உற்றிடுங் கவிகள் ஆகப்*

*பரமசற் குருவாய் ஓங்கும் பகவனின் அருளால்*

*செய்தேன்.*

என்பதாகும்.

பிரம்மத்திற்கு உரித்தான நாமங்கள் நூற்றியெட்டு. சாத்திரங்களை விரிவாக ஆராய்ந்து, அந்த நாமங்கள் விளக்கப் பாடல்களாகச் சொல்லப்பட்டுள்ளன. இந்த அர்த்தங்களை மனத்தில் திடமாக நிலை நிறுத்தும் பொருட்டு தகுந்த பாடல்களாக, எனது குருவான முத்திராமலிங்க சுவாமிகளின் அருளால் இந்நூலை இயற்றினேன் என்று பாடல் இயற்றப்பட்டதற்கான காரணத்தை மிக எளிதாக, அழகான பாடலால் விளக்குகிறார்.

இந்நூலில் இறைவனது திருநாமங்களை வரிசைப்படுத்திச் சொல்லி, ஒவ்வொன்றுக்கும் ஒரு பாடலைப் பாடுவதோடு, அவற்றின் பண்புகளையும் விளக்கிக் கூறுகிறார்.

இந்நூலின் நிறைவுப் பாடலில்

*"சுயம்பிர காச இன்பத் தோன்றலே துரிய வாழ்வே*
*வயம்பெறு நினது நாம வளத்தினை மிகத்தொ டுத்துத்*
*தயங்கும்இம் மாலை தன்னைத் தமியனேன் பிழைத்தற் கேநின்*
*புயந்தனில் அணிந்துஎந் நாளும் புலையனேன் தனையும் காவாய்"*

என்று தன் வேண்டுகோளை, சுவாமிகள் வைக்கின்றார்.

"இயல்பாகவே ஆனந்த வடிவமாய் இருப்பவரே! நான்காவது அவத்தையாகிய துரியத்தில் (ஆழ்ந்த தியான நிலை) எப்போதும் நிலைத்து இருப்பவரே! மேன்மை பொருந்திய தங்களைப் பற்றிய பெருமைகளை எல்லாம் கவிகளாக இயற்றித் தொடுத்துப் பாமாலையாக வைத்துள்ளேன். அடியேன் உய்யும் பொருட்டு, தங்கள் தோள்களில் அணிந்துகொள்ள வேண்டுகிறேன். கீழ்மையான அடியேனை எக்காலமும் காத்து அருளுங்கள்" என சுவாமிகள் வேண்டுகிறார். நாமும் துதிப்போம்! நற்கதி அடைவோம்!

*"எங்கும் நிறைந்த இறைவன் நாமம்*
*தினமும் நாமே துதித்து வந்தால்*
*அன்பும் அருளும் அளித்துக் காப்பான்*
*அன்னை போன்ற அருளுடன் இறைவன்."*

என்ற நிலையில் இந்நூலின் பாடல்களைக் கற்றுணர்ந்து நன்னிலை பெறுவோம்.

•••

திருநெல்லை இதழுக்கான ஆன்மிகப் படைப்புகள் வரவேற்கப்படுகிறன. திருநெல்லை (இணைய இதழ்), கோவிலூர் மடாலயம், கோவிலூர் என்ற முகவரிக்கு அஞ்சலிலோ அல்லது நேரிலோ தங்கள் ஆக்கங்களை அன்பர்கள் அளிக்கலாம்.

•••

# காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதி பாடல் நலம்

## அன்பு அறாது

செல்வமோ, ஆற்றலோ உள்ளவர்கள் அடுத்தவர்களுடைய இடர்களைக் களையவேண்டும். அதுதான் முறை. எளியவர்கள் அத்தகையவர்களை அணுகி முறையிடுவார்கள். அந்தச் செல்வர்களால் தங்கள் வறுமை போகும் என்ற நம்பிக்கையினால் அவர்களை விடாது பின்பற்றி வழிபடுவார்கள். 'இவர்கள் எளியவர்கள். இவர்களுக்கு உதவி புரிந்து இவர்களுடைய துன்பத்தை நீக்க வேண்டும்' என்று எண்ணி உதவ முன் வருவதே செல்வர்களுக்கு அழகு. அப்படி அந்தச் செல்வர் செய்வதில்லை; செய்யமாட்டார் என்று யாரோ சொல்கிறார்கள்.

"இடர் களைவார் என்று அவரை, அணுகினேன். அவர் களைய மாட்டாரா?"

"ஆம்; இடர் களையார்."

"அப்படியா இருக்கட்டும்; குற்றம் இல்லை."

மேலே அந்தச் செல்வரைப் பற்றிய விமரிசனம் தொடர்கிறது.

பெரியவர்கள், செல்வர்கள் பிறருடைய இடரைக் களைய வேண்டும். செல்வம் இல்லதாதவர்களாக இருப்பினும் நல்ல மனம் உடையவர்கள் தம்மால் ஓர் உதவி செய்ய இயலா விட்டாலும், ஐயோ, பாவம்!' என்று இரங்குவார்கள். அவர்களிடம் செல்வம் இருந்தால் கண்டு இரங்கிக் கொடுத்து விடுவார்கள். அவர்களிடமோ பொருள் இல்லை. ஆனால் பிறர்துன்பம் கண்டு இரங்கும் இயல்பு இருக்கிறது. இரக்கம் உண்டானால் தானே, கொடுக்க வேண்டும் என்ற எண்ணம் உண்டாகும்?



**- வாகீச கலாநிதி கி.வா. ஜகந்நாதன்**

"இடர் களையாரேனும் எமக்கு இரங்குவார்" என்ற எண்ணம் தோன்றுகிறது.

"அவர் இரங்கவும் மாட்டார்" என்று ஒரு குரல் எழும்புகிறது.

"இடரைக் களையவும் மாட்டார்; அப்படிக் களைவதற்குமுன் உண்டாகும் மனநிலையும் அவரிடம் இல்லை. இரக்கத்துக்கும் அவருக்கும் நெடுந்தாரம்" என்று அந்தக் குரல் மேலும் விளக்கத்தைத் தருகிறது.

"அப்படியா? எமக்கு இரங்கமாட்டாரா? இருக்கட்டும், அதனாலும் குற்றம்

இல்லை.”

“இடர் களையாரேனும் எமக்கு இரங்குவார் என்ற எண்ணம் இருந்தால் அதிலும் மண் விழுந்து விட்டதே! அப்படி இருந்துமா இன்னும் நம்பிக்கை?” அந்தக் குரல் வினாவை எழுப்புகிறது. மறுபடியும் அது தொடர்கிறது.

“இடர் களேயாரேனும் எமக்கு இரங்குவார் என்று சில நல்ல மனிதர்களைப் பற்றிச் சொல்ல இடம் இருக்கிறது. நீ வழிபடும் அவரிடமோ செயலும் இல்லை; இரக்கமும் இல்லை.”

“அது கிடக்கட்டும். தாம் ஒன்றைத் தராவிட்டாலும், இரங்காவிட்டாலும், ‘இந்த வழியிலே போ’ என்று வழிகாட்டுவார் அல்லவா? இடர் களைவார் என்று இருந்தேன். இல்லை யென்று சொல்கிறாய். இடர் களையாரேனும் எமக்கு இரங்காரேனும் இன்ன வழியில் போ என்று படரும் நெறி பணிப்பார் அல்லவா? அது போதுமே! அந்த நெறி யிற் சென்று நான் உய்கிறேன்.”

படரும் நெறியும் பணியார். அவர் அப்படிக் கை காட்டுவார் என்று காத்திராதே. அவரிடம் என்ன இருக்கிறது ஆசைப்பட?”

“அவர் சோதிவடிவினராயிற்றே சுடர் உருவினர் அல்லவா?”

“சுடர் உருவினரா? தூய சுடர் உருவினராக இருந்தால் நன்றாக இருக்கும். அந்த உருவில் எ லு ம் பு மாலையை அல்லவா அணிந்திருக்கிறார்? அவருடைய கோலத்தை நினைத்தாலே அச்சமாக இருக்கிறது. எலும்பு மாலையைக் கணமாவது கழற்றி வைக்கக் கூடாதா? அது என்ன மலர் மாலையா? காசு மாலையா? இந்த எலும்பணிந்த கோலத்தை மதித்து நம்பிக்கை வைக்கிறாயே!”

“என்னுடைய அன்பு, நீ சொல்லும் எதையும் எண்ணவில்லை. இது கிடைக்கும் என்று எதிர்பார்த்து வைக்கும் அன்பு அன்று அது.”

“அவர் கோலந்தான் பயங்கரம் என்றால் அவர் ஆடும் இடம் எது தெரியுமா? ஒரே பேய்க் கூத்து, நெருப்பில் நின்று ஆடுகிறார். ஈமக்காட்டில் எலும்பு மாலையை அணிந்து எரியில் ஆடுகிறாரே நினைத்தாலே அச்சம் உண்டாகிறது. அவரையா அணுகி அன்பு செய்வது?”

“எப்படி இருந்தாலும் அவரே எனக்குத் தலைவர்; உடையவர்; எம்மானார். அவர் எந்தக் கோலத்தில் இருந்தாலும் எதை அணிந்தாலும் எங்கே நடனம் ஆடினாலும் என் நெஞ்சம் அவரையே பற்றி அன்பு செய்கிறது. அவர் இடர் களையாமல் இருக்கட்டும். என் நெஞ்சம் அவர்பால் உள்ள அன்பைக் களையாது. எமக்கு இரங்காமல் கல் நெஞ்சராக இருக்கட்டும். அதனால் என் நெஞ்சம் கல்லாகாது. அது அவர்பால் உள்ள அன்பினால் நெக்குருகும். படரும் நெறி பணியாமல் இருக்கட்டும். என் நெஞ்சம் அன்புப்பாதையில் செல்வதினின்றும் ஒழியாது.”

காரைக்கால் அம்மையார் இப்படிச் சொல்கிறார். அவர் பேய்வடிவம் தாங்கியவர். அவருக்கு என்பறாக்கோலமும் எரியாடுவதும் அச்சத்தை உண்டாக்குமா?

அவரிடம் உள்ள அன்பு எதையும் எதிர்பாராத அன்பு. இறைவன் உயிர்களிடம் எந்தக் கைமாற்றையும் எதிர் பாராமல் கருணை வைக்கிறான், அதை அவ்யாஜ கருணை என்பார்கள். சிறந்த அன்புடையவர்களும் இறைவனால் ஒரு லாபம் உண்டென்று கருதி அன்பு செய்வதில்லை. அவ்யாஜ ப்ரேமை அது. அதையே பிரேம பக்தி என்பார்கள். அவன் பால் அன்பு செய்வதே அவர்களுக்கு இன்பம்.

"கூடும் அன்பினிற் கும்பிட லேயன்றி வீடும் வேண்டா விறலின் விளங்கினார்"

என்று சேக்கிழார் கூறுவார். முக்தியின்பத்தைக்கூட அவர்கள் வேண்டுவதில்லை. அத்தகைய சீரிய அன்புடையவர் காரைக்கால் அம்மையார், அவருடைய நெஞ்சத்திலுள்ள அன்பு எதையும் எதிர்பாராத, எதற்கும் அஞ்சாத, என்றும் குறையாத பிரேம பக்தி, அதனால்தான் இப்படி வருகிறது பாட்டு :

*"இடர்களையா ரேனும், எமக்குஇரங்கா ரேனும்,*
*படரும் நெறிபணியா ரேனும்சுடருருவில்*
*என்பு அறாக் கோலத்து எரிஆடும் எம்மானார்க்கு*
*அன்பு அறாது என்நெஞ்சு அவர்க்கு."*

சிவபெருமான் எம்முடைய இடரைக் களையார் என்றாலும், எம்பால் இரங்காமல் இருந்தார் என்றாலும், நாங்கள் செல்ல வேண்டிய வழியைக்கூடக் காட்டாராயினும் சோதி வடிவமுள்ள தம் திருமேனியில் எலும்புமாலை எப்போதும் நீங்காமல் இருக்கும் கோலத்தோடு, நெருப்பில் கூத்தாடும் எம் தலைவருக்கு என் அன்பு என்றும் அறாது; என் நெஞ்சு அவருக்கே உரியது; அவரையே கூட்டியும் பற்றுவது.

காரைக்காலம்மையார் பாடிய அற்புதத் திருவந்தாதியில் இரண்டாம் பாட்டு இது.

**பின்குறிப்பு:**

அமுத நிலையம் 1985 ஆம் ஆண்டு வெளியிட்ட காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதி என்ற நூலில் இருந்து எடுக்கப்பட்ட கட்டுரை. காரைக்காலம்மையார் திருப்பாடல்களை முற்றோதல் செய்யத் தொடங்கியுள்ளதால் அம்மையாரின் பாடல் சிறப்புகளை அறிய இப்பகுதி இப்போது திருநெல்லையில் இடம் பெறுகிறது.

# திருமந்திரம்

கல்லா அரசனும் காலனும் தேர் ஒப்பர்;
கல்லா அரசனின் காலன் மிகநல்லன்;
கல்லா அரசன் அறம் ஓரான் 'கொல்' என்பன்;
நல்லாரைக் காலன் நணுகிதில்லானே.

கருத்து: கல்வியில்லாத அரசன் எமனை ஒப்பான். ஒருவகையில் எமன், இவ்வரசனினும் நல்லவன் ஆவான். ஏன் எனில் இவ்வரசன் அறநெறியைச் சித்தியாது, நல்லோரையும் கொல்விப்பான். எமனோ, நல்லோரை அணுகான்.

*****

அவ்வியம் பேசி அறம் கெட நில்லன்மின்;
வெவ்வியன் ஆகிப் பிறர் பொருள் வவ்வன்மின்;
செவ்வியர் ஆகிச் சிறந்து உண்ணும் போது ஒரு
தவ்வி கொடு உண்மின் தலைப்பட்ட போதே.

கருத்து: பொறாமையால் அறம் தவறி நடவற்க. அறிவு இழந்து பிறர் பொருள் கவரற்க. சான்றோர்களைக் கண்டவுடனே, விருந்தினராக வரவேற்று, அவர்கள் கருணையுடன், இனிதாக உண்டபின், மீந்ததை, அஃது ஓர் அகப்பையா இருப்பினும் உண்ணுக.

*****

பற்றது வாய்நின்ற பற்றினைப் பார்மிசை
அற்றம் உரையான் அறநெறிக் கல்லது
உற்று உங்களால் ஒன்றும் ஈந்தது வேதுணை
மற்றண்ணல் வைத்த வழிகொள்ளுமாறே.

கருத்து: இந்த உலகில் அனைத்துக்கும் ஆதாரமாக இருக்கும் அந்த மெய்ப்பொருளைப் பற்றிய உண்மையை சிவபெருமான் அனைவருக்கும் உணர்த்துவதில்லை. அறநெறியில் இருப்பவர்களுக்கு மட்டுமே அவன் உணர்த்துவான். நம்மால் முடிந்தவரை பிறருக்கு தானம் செய்து உதவுவோம். அந்த தர்மம் தான் நமக்குத் துணை. அறநெறியில் நிற்கும் நமக்கு நம் அண்ணல் சிவபெருமான் சிறந்த வழியைக் காட்டுவான்.

# நலமே அருளும் திருநள்ளாற்று இறைவன்



தேனம்மை இலக்குமணன்,
காரைக்குடி

பகவான் ஸ்ரீ விஷ்ணுவின் நாபிக்கமலத்தில் உதித்தவர் நான்முகன். இவரது புத்திரர்கள் எழுவர். அவர்களுள் மூத்தவரான மரீசி மகரிஷி, சம்பூதி தம்பதிகளின் மகன் காசியபர். இவருக்கும் தக்ஷப் ப்ரஜாபதியின் மகளான அதிதிக்கும் சூரிய பகவான் மகனாகப் பிறந்தார். சூரிய பகவானின் மனைவி சுவர்ச்சலாதேவி. இவர்களுக்கு வைவஸ்தமனு, யமன், யமுனை ஆகிய குழந்தைகள் பிறந்தனர்.

ஒரு கட்டத்தில் சூரியனின் ஒளிக் கதிர்களைத் தாங்க இயலாமல் சுவர்ச்சலாதேவி அவரிடம் அதைச் சொல்ல அஞ்சி தன்னைப் போலவே ஒரு நிழலுருவை உருவாக்குகிறாள். அவள் பெயர் சாயாதேவி. தன் இடத்தில் இருந்து சூரிய பகவானோடு குடும்பம் நடத்தும்படிக் கூறிவிட்டு சுவர்ச்சலா தேவி தவம் செய்யப் போய் விடுகிறாள்.

சாயாதேவிக்கும் சூரிய பகவானுக்கும் தபதீ, ச்ருதச்ரவஸி, ச்ருதகர்மா என்ற குழந்தைகள் பிறந்தார்கள். மாற்றாந்தாயாக நடக்காவிட்டாலும் யமன் தன் தாயின் அன்பில் வேறுபாடு கண்டு சூரியனிடம் சொல்கிறார். சூரியன் சாயாதேவியை அழைத்து விசாரிக்க அவள் ‘தான் சுவர்ச்சலாதேவியின் நிழலுரு’ என்ற உண்மையை ஒப்புக் கொள்கிறாள். சூரியன் சுவர்ச்சலா, சாயா இருவரையும் மன்னித்து ஏற்றுக் கொள்கிறார்.

சூரியனோ தகதகக்கும் தங்கநிறம். ச்ருதகர்மாவோ கருநிற மேனி கொண்டவர். பார்வை வேறு தீட்சண்யம். இதனால் அடிக்கடித் தந்தையின் கோபத்துக்கு ஆளாவார் ச்ருதகர்மா. எனவே தாய் சாயாதேவி முடிந்தவரை அவரை அனைவர் பார்வையிலிருந்தும் மறைத்து வைப்பாள். சொல்லப் போனால் தன் மகனின் பார்வை யினால் யாருக்கும் எந்தக் கேடும் வந்துவிடக் கூடாது என எச்சரிக்கையாக இருப்பாள். ஆனால் விதி யாரை விட்டது? அது விநாயகரையும், சர்வேஸ்வரனையும், தசரதனையும், நளனையும் படுத்திய பாடு பெரும்பாடு.

கைலாயத்தில் விநாயகப் பெருமான் அவதரித்ததை முன்னிட்டு மாபெரும் வைபவம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. அந்த வைபவத்தைப் பார்க்க ச்ருதகர்மாவுக்கு ஆசையோ ஆசை. ஆனால் தாயாரோ போகவிடாமல் தடுக்கிறாள். ”ஒரு ஓரமாக நின்னு பார்த்துட்டு வரேம்மா” என்று கெஞ்சிக் கூத்தாடித் தாயாரைச் சமாதானப் படுத்திவிட்டுச் செல்கிறார் ச்ருதகர்மா.

கைலாயத்தில் எள் போட்டால் எண்ணையாகிவிடும் அளவு கூட்டம். அங்கே எல்லாரும் தொட்டிலில் கிடக்கும் குட்டி கணபதியின் பேரழகைப் புகழ்ந்து கொண்டே செல்கிறார்கள். ச்ருதகர்மாவுக்கும் ஆசை. அவரும் கூட்டத்தில் முண்டியத்துப் போய்க் குழந்தையைப் பார்க்க அக்கணமே அக்குழந்தையின் தலை காணாமல் போகிறது. இதென்ன விபரீதம். ச்ருதகர்மாவே ஒரு கணம் அதிர்ச்சிக்கு ஆளானார். பார்வதி

தேவியோ பதட்டத்துடன் பரமசிவனைப் பார்க்க அவர் அக்கணம் வடக்கில் தலைவைத்துப் படுத்திருந்த ஒரு யானையின் தலையைக் குழந்தையின் தலையோடு பொருத்த கணபதி யானைமுகன் ஆகிறார்.

“என் குழந்தைக்கு ஏன் இப்படி” என பார்வதி கேட்க, பரமனோ ”மனிதமுகம் இருந்தால் அசுர சம்ஹாரம் செய்ய முடியாது. கணபதியால் அசுர சம்ஹாரம் நடைபெறவேண்டி இருக்கு. அதுனால இப்படி ஆச்சு. ச்ருதகர்மாவின் பார்வை நலம்தான் செய்திருக்கு” எனச் சமாதானம் சொன்னாலும் பார்வதி கோபத்தோடு ”ச்ருதகர்மாவின் கால் ஊனமாகட்டும்” எனச் சாபமிடுகிறாள். ஊனமாக வீடு திரும்பிய மகனைப் பார்த்து வெகுண்ட சாயாதேவி சும்மா இருப்பாளா. அவள் “கஜமுகன் லம்போதரன் ஆகட்டும் “ என சபிக்கிறாள். அதனால் கணபதியின் வயிறு தொந்தியைப் போல் பெரிதானது.



இச்சம்பவங்களால் சூரியபகவானின் கோபமா? அல்லது சனி பகவானின் கோபமா?. அதனால் கடுந்தவம் செய்து சர்வேஸ்வரனிடம் தன் தந்தைக்கு நிகரான வலிமையைப் பெறுகிறார். சர்வேஸ்வரன் ”சனி உன் பக்தியை மெச்சி உனக்கு ஈஸ்வரப் பட்டம் தந்தேன்” என்கிறார். அத்துடன் நவகோள்களில் ஒன்றாகவும் ஆக்கினார். பூலோகவாசிகளின் பூர்வ புண்ணியத்தின்படி அவர்களைச் சோதித்துப் பலன் வழங்கும் பொறுப்பையும் ஒப்படைத்தார். வரம் கிடைத்ததும் அதைப் பரமன் மேலேயே அந்த வரத்தைச் செலுத்திப் பார்க்க ஆசையுறுகிறார் சனி பகவான். இதென்ன விபரீத ஆசை எனப் பரமன் கேட்கவில்லை.

சனீஸ்வரனுக்குத் தந்த வரத்தினைச் சோதனை செய்து பார்க்கத் தானே ஆயத்தமானர் சிவபெருமான். அவர் பூமியில் அவதரித்தார். ஆனால் சனி தன்னைப் பீடிக்காமல் இருக்க தாமரைக் குளம் ஒன்றில் தாமரைத் தண்டின் கீழே மூன்று நாழிகை பதுங்கி இருந்தார். அவர் வெளியே வந்ததும் சனி அவர் முன் தோன்றினார். “ என்ன சனி? நீ என்ன பெரிய சனியா ? உன்னால் என்னை ஒன்றும் செய்ய முடியவில்லை பார்த்தாயா?”எனக்கேட்க, சனியனோ” ஐயனே! நெற்றிக்கண்ணால் அனைத்தையும் பொடியாக்கும் தாங்களே என் பார்வையின் வீர்யத்திலிருந்து தப்பிக்கத் தாமரைத் தண்டில் ஒளிந்தீர்களே. இது ஒன்று போதாதா” எனக் கேட்க பரமன் ”நானாக இருந்தாலும் உன் பார்வையிலிருந்து தப்பமுடியாது என்ற உண்மையை உலகம் உணரவேண்டும் என்பதற்காகவே நான் ஒளிந்தேன். “ எனக் கூறி மறைந்தார்.

அறுபதாயிரம் ஆண்டுகள் அரசுக் கட்டிலில் அமர்ந்து ஆட்சி செய்தவர் தசரதச் சக்கரவர்த்தி. ஒரு முறை பன்னிரெண்டு வருடம் அவரது இராஜ்ஜியத்தைப் பஞ்சம் தாக்கப் போவதாக ஜோதிடர்கள் ஆரூடம் சொன்னார்கள். ”மாதம் மும்மாரி பொழியும் நாட்டில் அவ்வாறான நிலை ஏன் ஏற்படும்” என அவர் கேட்க ”அதற்கெல்லாம் சனிபகவானே மூலகாரணம்” என்பதை அவர்கள் சுட்டிக் காட்டினார்கள். வசிஷ்டரிடம் என்ன செய்யலாமென மன்னர் ஆலோசனை கேட்க அவரோ ”சனிபகவானை நேரில் கண்டு இதற்குத் தீர்வு காண்பாயாக” எனக் கூற தசரதன் தன் தங்கத் தேரில் ஏறிச் செல்கிறார்.

சனிபகவானைக் கண்டதும் இவரால்தானே உலகம் தாழ்ந்து போகிறது என்ற எண்ணம் தோன்றியது. தசரதர் தாங்காத கோபத்தோடு ஏதும் பேசாமல் தன் வில்லில் நாண் ஏற்றி அஸ்திரத்தைப் பிரயோகிக்க முற்படுகிறார். நாட்டு மக்கள் நலனுக்காகத் தன்னிடம் போரிட வந்திருக்கும் மன்னரைப் பார்த்துச் சனி பகவான் மனமிரங்கி "மன்னா! மக்கள் நலனுக்காக வந்திருப்பதால் உன் பிழை பொறுத்தேன். என்ன வரம் வேண்டும்" எனக் கேட்க அவரோ "பஞ்சம் தாக்காமல் மழை பொழிய வேண்டும்" என்ற வரம் கேட்கிறார். அது போலவே சனீஸ்வரனும் அருள்கிறார்.

இத்துடன் ஒருவரைப் பீடிக்கும் போது அத்துயரைச் சனிபகவானும் அடைகிறார் என்பதை நளன் என்னும் மன்னனின் சரித்திரம் கூறுகிறது. நிடத நாட்டின் அரசன் நளன். அவன் மனைவி தமயந்தி. ஒருமுறை புறங்கால் நனையும்படி நீரூற்றிக் கழுவாமல் பூஜையில் அமர்ந்தான் நளன். நியம நிஷ்டைகளில் கறாராக இருக்கும் சனி பகவான் இதுதான் சாக்கு என அவனைப் பிடித்துக் கொண்டார். இதன் விளைவால் அவன் புஷ்கரன் என்பவனோடு சூதாடி நாடு நகரம் அனைத்தும் இழந்தான்.

நளன் மனைவியோடு கானகம் புகுந்து இன்னல்களை அனுபவித்தான். ஒருகட்டத்தில் மனைவி தூங்கும்போது அவளை விட்டுப் பிரிந்து காட்டுக்குள் சென்றுவிட்டான். அப்போது காட்டுத்தீயில் கார்க்கோடகன் என்ற பாம்பு சிக்க அதைக் காப்பாற்றுகிறான். அதுவோ தன்னைக் காத்தவன் என்றும் எண்ணாது அவனைத் தீண்டுகிறது. பாம்பின் விஷம் ஏறியதால் நீலநிறமாகும் அவன் கறுத்துச் சிறுத்து அடையாளம் மாறிப் போகிறான். "உனக்குப் போய் உதவி செய்தேனே உன் புத்தியைக் காட்டி விட்டாயே " என அவன் அந்தப் பாம்பிடம் வருந்த அது அரவுரியைக் கொடுத்து "தேவையான போது இதை அணிந்தால் உன் சுய உருவம் திரும்பும்" எனக் கூறி மறைகிறது.

பல்வேறு இக்கட்டுகள், இன்னல்கள், போராட்டங்களுக்குப் பிறகு தமயந்தியைச் சந்தித்து அரவுரியை அணிகிறான் நளன். நாட்டையும் மீட்டுத் திரும்ப ஆட்சிக்கு வருகிறான். ஆனாலும் அவன் மனத்தில் நிம்மதி இல்லை. தீர்த்த யாத்திரை செய்து திருநள்ளாறு வந்து வணங்கும்போது சனியின் அருளால் நிம்மதி கிட்டுகிறது.

அவன் சனி பகவானிடம் கேட்கிறான்" இவ்வளவு இன்னல்களையும் நான் அனுபவிக்க நேர்ந்தது ஏன்?" "அன்பு நளனே, இத்துன்பங்களை நீ மட்டுமா அனுபவித்தாய். உன்னோடு சேர்ந்து நானும்தான் அனுபவித்தேன். கார்க்கோடகனின் விஷத்தால் அன்றே நீ அழிந்திருப்பாய். நீ அழியாமலிருக்க அதை நான் ஏற்றுக் கொண்டேன். அல்லும் பகலும் அவ்விஷம் என்னை மிகவும் வாட்டியது. படாதபாடு பட்ட நான் உன்னை விட்டு நீங்கும் இத்தருணத்தில்தான் நிம்மதி அடைந்தேன். உன் கதையைக் கூறி என்னை வணங்குவோர்க்கு எந்த இடரும் கொடுக்க மாட்டேன் " இதைக் கேட்டு நளன் மனம் உருகி சனீஸ்வரனை வணங்குகிறான். இவ்வாறு வேண்டியவர் வேண்டாதவர் எனப் பாகுபாடு காட்டாது தன் பார்வையாலும் நலமேதான் நல்குவான் ச்ருதகர்மா எனும் சனிபகவான்!!!

ஞானசம்பந்தர் அருளிய கோளறு பதிகம் சிவபெருமானையும் போற்றுகிறது. நவ கிரகங்களை நல்ல நல்ல அவை நல்ல நல்ல என்று சொல்லி நலம் விளைவிக்க வைக்கின்றது. அத்தேவாரத்தைப் பாடி நலம் பெறுவோம்.

"வேயுறு தோளி பங்கன் விடமுண்ட கண்டன் மிக நல்ல வீணை தடவி

மாசறு திங்கள் கங்கை முடிமே லணிந்து என்உளமே புகுந்த அதனால்

ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன்வெள்ளி சனி பாம்பு இரண்டும் உடனே

ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல அடியாரவர்க்கு மிகவே"

திருச்சிற்றம்பலம்

## சிவாலயங்களின் சிறப்புகள் - 3



**வே.இராமசாமி,** B.Com.F.C.A.,
Chartered Accountant
பலவான்குடி

சிவனேச செல்வர்களுக்கு பணிவான வணக்கங்கள்.

சிவாலயங்களின் சிறப்புகளை மாதம் ஒரு திருக்கோயில் என எழுத இருக்கிறேன். இந்தத் தகவல்கள் கோயிலின் ஆலய குறிப்புகளில் இருந்தும் கோயில் குருக்கள் சொல்வதை வைத்தும் எழுதி எழுதியுள்ளேன்.

# திருக்கடையூர்

மயிலாடுதுறையில் இருந்து 23 கி. மீ. தூரத்தில் திருக்கடையூர் இருக்கிறது. சீர்காழியில் இருந்து சுமார் 30 கி. மீ. தொலைவில் சீர்காழிநாகப்பட்டினம் சாலை வழியில் இத்தலம் உள்ளது.

ஆயிரம் ஆண்டுகள் பழமையான கோயில். தர்மபுரம் ஆதீனத்தின் கட்டுப்பாட்டில் உள்ள கோயில்.

சுவாமியின் திருப்பெயர்: அமிர்தகடேஸ்வரர், அமிர்தலிங்கேஸ்வரர்.

அம்மனின் திருப்பெயர்: அபிராமி.

தல மரம்: வில்வம் , பிஞ்சிலம் (ஜாதிமல்லிகைக்கொடி)

**இத்திருத்தலத்தின் பிற பெயர்கள்**

திருக்கடவூர் வீரட்டம், கடபுரி,



வில்வாரண்யம், பிரமரந்திரத்தலம், பாபவிமோசன புண்ணிய வர்த்தம்

**தீர்த்தம் :** அமிர்த தீர்த்தம், சிவகங்கை.

கால தீர்த்தம், மார்க்கண்டேய தீர்த்தம், காவிரி, அம்மனாறு முதலான 7 தீர்த்தங்கள்

**வழிபட்டோர்:** சம்பந்தர், அப்பர், சுந்தரர், திருமூலர் நாயனார், சேரமான் பெருமாள் நாயனார், நக்கீர தேவ நாயனார், பரணதேவ நாயனார், சேக்கிழார், திருமால், பிரமன், மார்க்கண்டேயர், எமன், ஏழு கன்னிகள், அகஸ்தியர், புலஸ்தியர், வாசுகி, துர்க்கை, பூமாதேவி, சிபி, சோமசருமன், சிவசருமர், ஏமகிரீடன், இரத்தினகைடன், சந்திரபூஷணன், பிரமாதிராசன், இரத்தினாகரன், பஞ்ச சூரியர்கள் முதலியர்.

## தல வரலாறு

பாற்கடலைக் கடைந்து எடுத்த அமுதத்தை தேவர்கள் அசுரர்களுக்கு கொடுக்க விரும்பாமல் அதை குடத்தில் (கடம்) எடுத்துக் கொண்டு செல்லும் போது வழியில் நீராடுவதற்காக இத்தலத்தில் இறக்கி வைத்துவிட்டு நீராடச் சென்றனர். விநாயகப் பெருமான் அமிர்த கலசத்தை ஒரு இடத்தில் மறைத்து வைக்க அந்த இடத்தில் இருந்து கலசத்தை எடுக்க இயலவில்லை

திரும்பி வந்து குடத்தை எடுக்க முயற்சி செய்த போது குடத்தை எடுக்க முடியவில்லை. குடம் பூமியில் வேர் ஊன்றி விட்ட இடம்தான் திருக்கடையூர் என்று பெயர் பெற்றது. அந்தக் குடம் லிங்க வடிவில் நிலைத்து நின்றபடியால்



இந்த லிங்கேஸ்வரர் அமிர்தகடேஸ்வரர் என்று அழைக்கப்படுகிறார்.

தை அமாவாசை திதியை அம்பிகையின் முக அழகை தரிசித்துக் கொண்டிருந்த அபிராமி பட்டர் பௌர்ணமி என்று தவறாக சரபோஜி மன்னரிடம் சொல்ல, அதனால் கோபமுற்ற மன்னரிடம் இருந்து காக்கும்படிக்கு அபிராமி அந்தாதி பாடி அமாவாசையை பௌர்ணமியாக மன்னருக்கு மாற்றிக் காட்டிய அற்புதம்

நிகழ்ந்த தலம்.

மேற்கில் உள்ள ஏழு நிலை ராஜகோபுரம் தான் பிரதான வாயிலாகும். கருவறையில் உள்ள அமிர்தகடேஸ்வரர் சுயம்பு லிங்கமாக மேற்கு நோக்கி காட்சி தருகிறார். இவ்வாலயத்தில் நவக்கிரக சந்நிதி இல்லை.

திருக்கடையூர் கோயிலில் முதலில் வழிபட வேண்டிய மூர்த்திகள் அகத்தியர் வழிபட்ட பாபகரேஸ்வரர் மற்றும் புலத்தியர் வணங்கிய புண்ணியகரேஸ்வரர் ஆவார்கள். இவர்களை வணங்கிய பின்பு தான் மற்ற சுவாமிகளை வழிபட வேண்டும் என்பது ஐதீகம். இந்த இருவரையும் வணங்கும் பொழுது பாவங்கள் நீங்கி புண்ணியம் உண்டாவதாக நம்பிக்கை. புண்ணியகரேஸ்வரருக்குத் தனிச் சன்னதி உள்ளது இந்த சன்னதியின் எதிரே உள்ள சுவரில் உள்ள தொலை வழியாக அகத்தியர் வழிபட்ட பாவகரேஸ்வரர் இருக்கிறார் அவரை வணங்கிய பின்பு புண்ணியகரேஸ்வரரை வணங்க வேண்டும்.

தல விநாயகர் ஆன கள்ள வாரணப் பிள்ளையார் துதிக்கையில் அமிர்த கலசம் வைத்தபடி காட்சி தருகிறார்

சிதம்பரத்தில் ஆகாயம் ரகசியம் போல் இங்கு சுவாமிக்கு வலது புறத்தில் சுவரில் எந்திரத் தகடு ஒன்று உள்ளது. இதனை திருக்கடையூர் ரகசியம் என்று சொல்லுகிறார்கள்

திருக்கடையூரில் சிறப்பு மூர்த்தியாகத் திகழ்பவர் பாலாம்பிகை சமேத கால சம்ஹார மூர்த்தி. இவரது உற்சவ திருமேனி அளவில் மிகப்பெரியதாகவும் மிகக் கம்பீரமாகவும் தெற்கு நோக்கி திருக்காட்சி தருகிறது. இவரது காலடியில் எமதர்மராஜா விழுந்து கிடப்பதையும் காணலாம். கால சம்ஹார மூர்த்தி தனது இடது காலை ஆதிசேஷன் தலை மீது வைத்திருக்கிறார். அவருடைய சூலத்திற்கு கீழே எமன் இருக்கிறார். அருகில் குண்டோதரன் ஒரு கயிற்றில் எமனைக் கட்டி இழுத்தபடியும் மார்க்கண்டேயர் வழங்கியபடியும் காட்சி தருகிறார்கள். கால சம்ஹார மூர்த்தியைத் தரிசிக்கும் பொழுது எமனைப் பார்க்க முடியாது. பூஜை செய்யும் பொழுது மட்டும் பீடத்தைத் திறப்பார்கள் அப்பொழுது தான் எமனைப் பார்க்க முடியும். எமன் இல்லாமல் சுவாமி கையில் சூலத்துடன் காட்சி தருவதை, சம்கார கோலம் என்றும் எமனுடன் இருப்பதை உயிர்ப்பித்த கோலம் என்றும் சொல்கிறார்கள். ஆக ஒரே சமயத்தில் ஒரே இடத்தில் சம்கார மற்றும் அனுக்கிரக மூர்த்தியைத் தரிசனம் செய்யலாம். இந்த சன்னதியில் பாலாம்பிகை சிறுமி வடிவில் இரு கரங்களுடன் காட்சி தருகிறாள் இவருக்கு அருகில் லட்சுமி சரஸ்வதி இருவரும் இருக்கிறார்கள். இந்த சன்னதியில் வெள்ளிப்

பேழையில் உடையவர் மரகதலிங்கம் திருக்காட்சியைக் காணலாம்.

இங்கு பிரகாரத்தில் ஒரு சன்னதியில் பார்வதி முருகனை வலது மடியில் அமர்த்திய கோலத்தில் குகாம்பிகையாகத் திருக்காட்சி தருகிறார்.

மேற்கு நோக்கி இருக்கும் மூலவரை உற்று நோக்கினால் அவருக்குப் பின்னால் ஒரு லிங்கம் இருப்பது போல் ஒரு தோற்றம் தெரியும்.

எமனின் உற்சவ திருமேனி காலசம்கார மூர்த்தி சன்னதியின் எதிரில் உள்ளது.

பிரகாரத்தில் மார்க்கண்டேயர், நாகநாத ஈஸ்வரர், பஞ்சலிங்க சன்னதி, குங்கிலிக் கலிய நாயனார், வீரபத்திரர், அஸ்வினி, தேவர், சந்திரசேகரர், சோமாஸ்கந்தர், சுப்பிரமணியர், பிச்சாடனார் ஆகியோர்களுக்குச் சன்னதி உள்ளது.

கார்த்திகை மாத சோமவார நாட்களில் மூலவர் சந்நிதிக்கு எதிரில் உள்ள சங்கு மண்டபத்தில் வலம்புரி சங்குடன் கூடிய 1008 சங்குகள் வைத்து இறைவனுக்கு அபிஷேகம் நடைபெறும். அச்சமயத்தில் மட்டுமே இறைவன் திருமேனியை வஸ்திரம் ஏதுமின்றி தரிசிக்க முடியும். காலன் பாசக்கயிறு மேலே விழுந்ததால் ஏற்பட்ட அடையாளத் தழும்புகளும், காலனை சம்ஹாரம் செய்யும் பொருட்டு லிங்கத்திலிருந்து வெடித்துத் தோன்றியதால் லிங்கத்தின் உச்சியில் ஏற்பட்ட பிளவும் நன்றாகத் தெரியும். அதேபோல் முன் மண்டபத்தில் உள்ள காலசம்ஹார மூர்த்தியின் செப்புச் சிலை வடிவமும் சிவலிங்கம் இரண்டாகப் பிளந்து அதிலிருந்து திரிசூலம் ஏந்திய கையுடன் சிவபெருமான் வெளிப்படும்படி தத்ரூபமாக அமைந்துள்ளது. இந்த காலசம்ஹார மூர்த்திக்கு ஆண்டுக்கு 11 முறை மட்டுமே அபிஷேகம் நடைபெறும். அவ்வாறு அபிஷேகம் நடைபெறும் போது இறைவனின் திருமேனி அழகினைக் கண்டு களிக்க முடியும்

அன்னை அபிராமி அருள் புரியும் அதி அற்புதமான தலம். அம்மனின் 51 சக்தி பீடங்களில் இது கால சக்தி பீடம் ஆகும். இந்தத் திருத்தலத்தில் உள்ள அபிராமி அம்மன் மிகவும் சக்தி வாய்ந்தவர். இவரை வழிபடுபவர்களுக்குச் செல்வச் செழிப்பு கல்யாண வரம், குழந்தை வரம், கல்வி கேள்விகளில் சிறந்த ஞானம் ஆகியவற்றைத் தருகிறார் மூலவர் அமிர்தகடேஸ்வரரை வணங்குபவர்களுக்குத் துயரம் நீங்கி மன அமைதி உண்டாகும். மேலும் வேலை வாய்ப்பு, தொழில் அபிவிருத்தி, உத்தியோக உயர்வு ஆகியவற்றுக்காகவும் வழிபட வேண்டிய தலம்...

(தொடரும்)

# புதுச்சேரி அம்பலத்தடையார் மடம்

தமிழ் தாயின் பெருமைகளையும், அருமைகளையும் அறிய பக்தி இலக்கியங்கள் தான் முக்கிய காரணம். இவற்றில் மதுரை திருவாதவூர் மாணிக்கவாசகர் எழுதிய திருவாசகம் என்பது தெய்வத்தின் குரலாகவே கருதப்படுகிறது. அதனால்தான் மொழிகள் கடந்து, தேசம் கடந்து, சமயம் கடந்து படிக்கும் அனைவரையும் பக்தியால் வசீகரிக்கும் இறைத் தன்மையைப் பெற்றதாக விளங்குகிறது.

திருவாசகத்துக்கு உருகார், ஒரு வாசகத்துக்கும் உருகார்! என்ற பழமொழியும் வழக்கத்திலுள்ளது.

இத்தகைய சிறப்புமிக்க திருவாசகத்தின் மூல ஓலைச்சுவடி புதுச்சேரியில் அம்பலத்தாடும் சுவாமிகள் திருமடத்தில் பாதுகாக்கப்பட்டு தினமும் பூஜை செய்யப்படுகிறது.

மாலிக்கபூர் படையின் கடும் சோதனையை மீறி நாகலிங்க சுவாமிகள் திருவாசக மூலச்சுவடியை பத்திரமாக சிதம்பரத்திலிருந்து புதுச்சேரிக்குக் கொண்டு வந்தார்கள். கடற்கரையோரத்தில் ஓலைக்குடிசையில் வைத்து திருவாசகத்தை போற்றி தினமும் பாதுகாத்த நாகலிங்க சுவாமிகள், பின்னர் மடத்தையும் நிறுவி அதில் திருவாசக மூல ஓலைச்சுவடியையும் பாதுகாத்துள்ளார்.

திருமடத்தில் உள்ள திருவாசக மூல ஓலைச்சுவடி சுமார் 300 பனை ஓலை இலைகளால் ஆக்கப்பட்டுள்ளது. அதில் இருபுறமும் எழுத்தாணியால் திருவாசக பதிகங்கள் எழுதப்பட்டுள்ளன. அந்த திருவாசக மூல ஓலைச் சுவடியானது 2 அடி உயரமும் 2 அடி அகலமும் உள்ள வெள்ளிப் பேழைக்குள் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளது. ஓலைச்சுவடி மீது தாமிரப் பட்டயம் பாதுகாப்புக்காகப் பொருத்தப்பட்டுள்ளது.

ஓலைச்சுவடியைப் பாதுகாப்பதற்காக ஜவ்வாது, புனுகு ஸ்பெயினில் இருந்து கொண்டுவரப்படும் அத்தர் ஆகியவை ஆண்டுக்கு ஒரு முறை அதன் மீது



(இ–வ) தென் சபாநாயகர் கோயில் அறங்காவலர் திரு முத்துக்குமார், திருமதி சுனில் குமார் வர்மா, திரு சுனில் குமார் வர்மா, கோவிலூர் சுவாமிகள், குருமகா சன்னிதானம் திருப்பெருந்திரு கனகசபை சுவாமிகள், முனைவர் வேல் கார்த்திகேயன்.

பூசப்படுகிறது.

திருமடத்தில் உள்ள அம்பலத்தாடும் நடராஜர் திரு முன்பு உள்ள திருவாசக மூல ஓலைச்சுவடிக்குத் தினமும் காலையில் முதல் பூஜை நடைபெறும்.

மகா சிவராத்திரி அன்று திருவாசக மூல ஓலைச்சுவடி வெளியே எடுக்கப்பட்டு பொதுமக்கள் முன்னிலையில் சிறப்புப் பூஜை நடைபெறுகிறது.

இவ்வளவு தெய்வத்தன்மை பொருந்திய திருவாசக மூல ஓலைசுவடியைக் காணும் பேறு, மயிலம் முனைவர் வேல் கார்த்திகேயன் உதவியுடனும் அம்பலத்தடையார் மடம் 33வது குருமகா சன்னிதானம் திருப்பெருந்திரு கனகசபை சுவாமிகள் கருணையினாலும் கிட்டியது. அத்துடன், நம்முடன் காசி அன்னதானம் குறித்து கலந்து பேச வந்திருந்த காசி விசுவநாதர் கோயில் தலைமை செயல் அதிகாரி திரு சுனில் குமார் வர்மா அவர்களும் குடும்பத்துடன் கலந்து கொண்டார்கள்.

# ஒலிப் பேழை



திருநெல்லை இணைய இதழாக பல்லாயிரம் ஆன்மீகப் பெருமக்களைச் சென்று சேர்ந்து வருவது மகிழ்ச்சி அளிக்கிறது. இந்த இதழ் பல புதுமைகளைப் பெற்று வளர்ந்து வருகிறது. அந்த வகையில் ஒலிப் பேழை என்ற புதியபகுதி தொடங்கப்படுகிறது. தமிழ் இணைய இதழ் உலகிற்கோர் புதுமை.

திருநெல்லை இதழில் மாதந்தோறும் கம்பவாரிதி இலங்கை திரு ஜெயராஜ் அவர்களிடம் வினாக்களை எழுப்பி அவ்வினாக்களுக்கு விடையை அவர்களின் குரல்வழியாகப் பெறும் புதிய முயற்சி இந்த இதழில் இருந்து தொடங்கப்படுகிறது.

அவர்களிடத்தில் அன்பர்கள் கேட்ட வினாக்களும் அதற்கு அவர்கள் அளித்த விளக்கங்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றைக் கேட்டுப் பயன்பெற வேண்டுகிறோம்.

வினா 1

நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து என்று மணிவாசகர் பாடுகிறார் அவர் கூறும் நடிகர் யார் அவரே நடிகர் என்றால் நாம் எல்லோரும் எந்த நிலையில் இருக்கிறோம்

விளக்கம்

வினா 2

கம்பராமாயணத்தில் ஒரு பாட்டுடையான் என்று சத்ருகனை அ.ச ஞான சம்பந்தம் ஐயா குறிப்பிடுகிறார்.கம்பராமாயணத்தில் ஒரு பாட்டில் தான் அவர் வருகிறாரா.

விளக்கம்

வினா 3

இலங்கையில் திருவாசக நிகழ்வுகள் பற்றி தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறோம்

விளக்கம்

# காட்சிப் பேழை

இந்த மாதம் சுவாமிகள் கலந்து கொண்ட நிகழ்வுகளின் தொகுப்பு, ஒவ்வொரு படமாக கிளிக் செய்து பார்க்கலாம்.

இதுவும் இந்த இதழின் புதுமை.

# காணொளிப் பேழை

கோவை நகரத்தார் சங்க வைர விழாவில் நிகழ்த்திய ஆசியுரை.

கோவிலூர் தென் சபாநாயகர் கோயிலை பொதிகை டிவி காட்சிப்படுத்தியது.

கொழும்பு ஐஸ்வர்ய லெட்சுமி கோவில் திருப்பள்ளி எழுச்சி பஜனையில் கம்பவாரிதி ஐயா உடன்.

# தென் சபாநாயகர் கோயில் தரிசனம்

வைகுண்ட ஏகாதசியை முன்னிட்டு 22.12.23 அன்று மாலை பள்ளி கொண்ட கோவிந்தராஜப் பெருமாள் மூலவருக்கு சிறப்பு அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன.

அருள்மிகு நடராசப் பெருமானுக்கு ஒரு வருடத்தில் நடைபெறும் ஆறு மகா அபிஷேகங்களில் ஒன்றான ஆருத்ரா தரிசன அபிஷேகமும் தரிசனமும் 27.12.2023 அன்று மாலை வெகு சிறப்பாக நடைபெற்றது. ஏராளமான பக்தர்கள் கலந்து கொண்டு அருள்மிகு சிவகாமி அம்மன் உடனுறை ஸ்ரீ ஆனந்த நடராச மூர்த்தியைத் தரிசனம் செய்து மகிழ்ந்தனர்.

தை மாத வழிபாட்டு நிகழ்ச்சிகள்:

| | | |
|---|---|---|
| 18.01.2024 | வளர்பிறை அஷ்டமி | மாலை வைரவர் வழிபாடு |
| 21.01.2024 | வளர்பிறை ஏகாதசி | மாலை பெருமாள் அபிஷேகம் |
| 23.01.2024 | பிரதோஷம் | |
| 25.01.2024 | தைப்பூசம் | மாலை சிறப்பு வழிபாடு |
| 29.01.2024 | சங்கடஹரசதுர்த்தி | மாலை விநாயகர் வழிபாடு |
| 02.02.2024 | தேய்பிறை அஷ்டமி | மாலை வைரவர் வழிபாடு |
| 07.02.2024 | பிரதோஷம் | |

உ
சிவமயம்

    



**கோவிலூர் ஆண்டவர் துதி**

வேதமுதல் முனிவர்களுந் தேடி காணா
மெய்ப்பொருளே அடியவர் பவநீக்கவேண்டி
ஓதரிய கழனிநகர் தனில மர்ந்த
வுத்தமனே மத்தனுளத் துணர்வே போற்றி!
ஏதமதாம் விடயமதி லுழல்வே னுக்கிங்கு
ஈதனைத்தும் சொருபமென விசைத்தாய் போற்றி!
முதுணர்வே வடிவமாய் அமர்ந்து நின்ற
முத்திராமக் கனியே போற்றி! போற்றி!



## சிவகங்கை மாவட்டம், காரைக்குடி கோவிலூர் ஆதீனம்
## அருள்மிகு கோவிலூர் ஆண்டவர் திருக்கோவில் மற்றும்
## திருச்சுற்று (மேனாள் குரு முதல்வர்கள்) திருக்கோவில்கள்

# திருநெறிய தெய்வத் தமிழ்த் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா அழைப்பிதழ்

பேரன்புடையீர், வணக்கம்

பாண்டிய நாட்டில் சிவகங்கை மாவட்டத்தில் அருள்தரும் திருநெல்லை நாயகி உடனமர் கொற்றவாளீசுவரர் எழுந்தருளும் காரைக்குடி கோவிலூர் என்னும் இவ்வூரில் இருநூறு ஆண்டுகளுக்கு முன் காரைக்குடி நகரத்தாரின் தவப்பயனாக அவதரித்து தெய்வத் தமிழ் வேதாந்த மரபை உலகம் பரவ செய்த கோவிலூர் ஆண்டவர் என உலகம் போற்றும் அருள்தரும் முத்திராமலிங்க ஞான தேசிக சுவாமிகள் (அதிட்டானம்) திருக்கோவிலுக்கும் அவர்பின் வழி வந்த துறவு ஆண்டவர் என போற்றப்படும் அருணாசல சுவாமிகள், அவர் பின் வழி வந்த சிதம்பர சுவாமிகள் என போற்றப்படும் கருணாநிதி சுவாமிகள், அவர் பின் வழி வந்த நாச்சியப்ப சுவாமிகள், அவர் பின் வழி வந்த மெய்யப்ப சுவாமிகள் ஆகிய மேனாள் குருமார்களின் திருக்கோவில்களுக்கும் (அதிட்டானங்கள்) திருச்சுற்றில் அமைந்துள்ள அருள்மிகு விநாயகர், அருள்மிகு முருகன் கோவில்களுக்கும் அருட்கொடை பல வழங்கி திருக்கோவில் திருப்பணிகளும் நித்திய பூசைகளும் செய்து வரும் நகரத்தார் மரபில் வந்த காரைக்கால் அம்மையார், இயற்பகை நாயனார், அமர்நீதி நாயனார், கலிக்கம்ப நாயனார், மூர்த்தி நாயனார் ஆகிய நாயன்மார்கள், துறவு நெறியை எளிய முறையில் உலகுக்கு எடுத்துரைத்த பட்டினத்து அடிகள் ஆகிய அருளாளர்களுக்கு புதிதாக திருமேனியையும் அமைத்த திருக்கோவில்களுக்கும் **திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா** நடத்த குருவருள் கூட்டிவைத்த நிலையில் நமது **கோவிலூர் ஆதீனகர்த்தர் சீர் வளர் சீர் நாராயண ஞான தேசிக சுவாமிகள்** தலைமையில் திருப்பணிகள் செம்மையான முறையில் செய்யப்பெற்று இத்திருக்கோவில்கள் திருக்குட நன்னீராட்டு விழாவானது, **தவத்திரு குன்றக்குடி அடிகளார், பேரூர் ஆதீனம், சிரவை ஆதீனம், தவத்திரு பழனி சாது சுவாமிகள், மயிலம் பொம்மபுர ஆதீனம்** ஆகியோரது முன்னிலையில் நிகழும் மங்களகரமான திருவள்ளுவர் ஆண்டு 2055, சோபகிருது வருடம் **தை மாதம் 19ஆம் நாள் (02.02.2024) வெள்ளிக்கிழமை** சுவாதி நாள்மீனும், சப்தமி திதியும், சித்தயோகமும் கூடிய நன்னாளில் **காலை 9.30 மணி முதல் 10.30 மணிக்குள்** மீன (ஓரையில்) லக்கினத்தில் சிறப்பாக நடைபெற திருவருள் கூட்டி வைத்துள்ளது. அன்பர்கள் அனைவரும் இவ்விழாவில் கலந்து கொண்டு கோவிலூர் ஆண்டவர் குருவருள் பெற அன்புடன் அழைக்கின்றோம்.

வேள்விப்பணி :
பேரூராதீனம் மற்றும் சிரவையாதீனசீடர்
சிவத்திரு. ப. சண்முகசுந்தரம் குழுவினர்
சாந்தலிங்கர் அருள்நெறி மன்றம்,
பேரூர்

வேணும்
**ஸ்ரீ சற்குரு நாதன் துணை**

# நிகழ்ச்சி நிரல்

| | | |
|---|---|---|
| தை மாதம் 17ஆம் நாள்<br>31.01.2024<br>புதன்கிழமை | மாலை 4.00 மணிக்கு | திருவிளக்கு ஏற்றுதல், புனிதநீர் வழிபாடு, ஆனைந்து வழிபாடு, மூத்த பிள்ளையார் வழிபாடு, அனுமதி பெறுதல் ஐம்பூத வழிபாடு, நிலத்தேவர் வழிபாடு, திருமகள் வழிபாடு, நிலத்தேவர் வேள்வி, புற்றுமண் எடுத்தல், முளைப்பாலிகையிடுதல், காப்பு அணிதல், அருட்பிரசாதம் வழங்குதல். |
| தை மாதம் 18ஆம் நாள்<br>01.02.2024<br>வியாழக்கிழமை | காலை 5.30 மணிக்கு | விநாயகர் வேள்வி |
| | காலை 10.00 மணிக்கு | காரைக்கால் அம்மையார் அருளிய பதிகங்கள் முற்றோதுதல் |
| | மாலை 5.00 மணிக்கு | திருக்குடங்கள் அலங்காரம் செய்தல், அருள் சக்திகளை திருக்குடத்தில் எழுந்தருளச் செய்தல், திருக்குடங்கள் யாக சாலைக்கு எழுந்தருளல், வாயிற்காவலர் வழிபாடு. |
| | இரவு 7.00 மணிக்கு | தமிழ் வேதாந்த மரபை தொடங்கிய ஆண்டவர்க்கும், குருமார்கள், அடியார் திருமேனிகளுக்கும் முதல் கால வேள்வி, திருமஞ்சன ஆகுதி, 108 திரவியாகுதி, நிறையாகுதி, மலர் வழிபாடு (அர்ச்சனை), திருமுறை விண்ணப்பம், வேண்டுதல் விண்ணப்பம், பேரொளி வழிபாடு, அருட்பிரசாதம் வழங்குதல். |
| | இரவு 8.00 மணி முதல் 9.00 மணிக்குள் | விமான (கோபுர) கலசம் நிறுவுதல், எண்வகை (அஷ்டபந்தன) மருந்து சாத்துதல். |
| தை மாதம் 19ஆம் நாள்<br>02.02.2024<br>வெள்ளிக்கிழமை | காலை 6.00 மணிக்கு | திருப்பள்ளி எழுச்சி, மங்கள இசை |
| | காலை 6.30 மணிக்கு | மூல மூர்த்திகளுக்கு ஆனைந்து ஆட்டுதல், காப்பு அணிவித்தல் |
| | காலை 7.00 மணிக்கு | இருள் நீக்கி அருள் நல்கும் ஆண்டவர்க்கும், குருமார்கள், குருமார்கள், அடியார் திருமேனிகளுக்கும் இரண்டாம் கால வேள்வி, திருமஞ்சன ஆகுதி, 108 திரவியாகுதி, (நாடி சந்தானம்) கலைகளை நாடியின் வழியாக திருமேனியில் எழுந்தருளச் செய்தல், நிறையாகுதி, மலர் வழிபாடு (அர்ச்சனை) திருமுறை விண்ணப்பம், வேண்டுதல் விண்ணப்பம், பேரொளி வழிபாடு, திருக்குடங்கள் ஞான உலா யாத்திரை கொடையளித்தல். |
| | காலை 9.30 மணி முதல் 10.30 மணிக்குள் | **திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா** |
| | காலை 11.30 மணிக்கு | **பெருந்திருமஞ்சனம் (மகா அபிடேகம்)** |
| | மதியம் 12.30 மணிக்கு | பதின்மங்கல காட்சி (குச தரிசனம்) பேரொளி வழிபாடு (அலங்கார பூசை) |
| | மதியம் 1.00 மணி | மகேசுவர பூஜை (அடியார்களுக்கு அமுது செய்வித்தல்) |

**01.02.2024 வியாழக்கிழமை மாலை 5.15 மணிக்கு**

## அருள் அரங்கம்

தலைமை : தவத்திரு. **பழனி சாது சுவாமிகள்** அவர்கள்

நகரத்தார் நாயன்மார்கள் : கம்பவாரிதி **இலங்கை** திரு. **ஜெயராஜ்** அவர்கள்

அருள்மிகு கோவிலூர் ஆண்டவர், 2ம் பட்டம், 3ம் பட்டம் குருமார்கள் : முனைவர் **மு. பழநியப்பன்** அவர்கள்
தமிழ்த்துறைத் தலைவர், அரசு கலை & அறிவியல் கல்லூரி, திருவாடானை

நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள், மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் : சீர் வளர் சீர் **நாராயண ஞான தேசிக சுவாமிகள்** அவர்கள்

அனைவரும் வருக! ஆண்டவர் அருள் பெறுக!

Thirumagal

# கோவிலூர் ஆண்டவர் நூலகம்

கோவிலூரில் அமைக்கப்பெற்றுள்ள "கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில்" சுமார் 40,000 நூல்கள் உள்ளன. நூல் விவர அட்டவணையைப் பதிவிறக்கம் செய்ய இங்கு சொடுக்கவும்.

# கோவிலூர் ஆண்டவர் இணைய நூலகம்




கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள நூல்கள் அனைத்தையும் கோவிலூர் ஆண்டவர் நூலகம் என்ற இணையதள நூலகத்தில் பதிவேற்றம் செய்து தமிழ்க் கொடையாக அளிக்க முடிவு செய்துள்ளோம்.

தற்போது சுமார் 2840 அரிய நூல்கள் இணைய நூலகத்தில் உள்ளன.

இப்போது நாள் ஒன்றுக்கு சுமார் 150 பக்கங்களைப் புதிதாக இந்த நூலகத்தில் சேர்த்துக் கொண்டிருக்கிறோம். விரைவில் நாள் ஒன்றுக்கு சுமார் 700 பக்கங்களை சேர்க்கும் பணி நடந்து கொண்டிருக்கிறது.

இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்க /பதிவிறக்கம் செய்ய இங்கு சொடுக்கவும்.

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள (பட்டியலில் காட்டப்பெற்றுள்ள) எந்த நூலாவது உங்களுக்கு தேவை என்றால் நூலகப் பொறுப்பாளர் திரு வெங்கடாசலம் அவர்களைத் (தொலைபேசி எண் 9442912649 என்பதில்) தொடர்பு கொள்ளவும். அந்த நூல் பதிப்புரிமைக்கு அப்பால் இருக்கும் நிலையில் அதை நம் இணைய நூலகத்தில் சேர்த்திட ஆவன செய்கிறோம். தாங்களும் அந்த நூலை உங்கள் வீட்டில் இருந்து இணையவழியாகப் படிக்கலாம். நூல் இணையத்தில் சேர்த்தபின் உங்களுக்குத் தகவல் தெரிவிக்கப்படும். நீங்கள் அந்த நூலை இணைய நூலகத்தில் படித்துக் கொள்ளலாம் அல்லது பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். இதற்கு எந்தக் கட்டணமும் இல்லை

இணைய நூலகத்தில் சென்ற மாதத்தில் மட்டும் சுமார் 60 நூல்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. மிகவும் அரிதான சில நூல்கள் இப்போது பதிவேற்றம் செய்யப் படுகின்றன.

இணைய நூலகத்தைப் பயன்படுத்துவோம். இறை தத்துவங்களை அறிவோம்.

# எதிர் வரும் நிகழ்வுகள்

16.1.2024 சிதம்பரத்தில் நடைபெறும் கோடி அருச்சனையில் பங்கு கொள்ளுதல்.

*****

20.1.2024 முதல் 23 வரை அயோத்தியில் ராமர் கோயில் குடமுழுக்கு நிகழ்வில்.

*****

31.1.2024 முதல் 02.2.2024 வரை கோவிலூர் குரு முதல்வர் ஆண்டவர் மற்றும் மேனாள் குரு முதல்வர்களின் அதிட்டானங்களுக்கு கும்பாபிஷேகம் (அழைப்பு இந்த இதழில் வேறு பக்கத்தில் உள்ளது).

*****

03.2.2024 நம் திருமடத்தில் 13வது பட்டம் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் முதல் குருபூசை.

தென்சபாநாயகர் கோவில் கட்டளைகளில் பங்கு கொள்ள விரும்புபவர்கள் 94433 35312 என்ற எண்ணை தொடர்பு கொள்ளவும்.



திருநெல்லை இணைய வழி திங்களிதழைப் பெற விரும்புபவர்கள் 94433 37011 என்ற எண்ணிற்கு வாட்சப்–பில் தொடர்பு கொள்ளவும்.



இணைய வழி தேவார இன்னிசை வகுப்பில் கலந்து கொள்ள விரும்புபவர்கள் 94433 35312 என்ற எண்ணை வாட்சப்–பில் தொடர்பு கொள்ளவும்.



திருநெல்லை இதழுக்கான ஆன்மிகப் படைப்புகள் வரவேற்கப்படுகிறன. திருநெல்லை (இணைய இதழ்), கோவிலூர் மடாலயம், கோவிலூர் என்ற முகவரிக்கு அஞ்சலிலோ அல்லது நேரிலோ தங்கள் ஆக்கங்களை அன்பர்கள் அளிக்கலாம்.



திருநெல்லை இணைய வழி மாத நாளிதழ் பற்றி தங்களுடைய மேலான கருத்துக்களை வாட்சப் எண். 94433 37011 மற்றும் koviloormadalayam@gmail.com என்ற மின்னஞ்சலுக்கு அனுப்பவும்.